# செந்தமிழ்ச்

# செல்வி




## உள்ளுறை



சிலம்பு-௫௬ ] வள்ளுவர் ஆண்டு-௨0௧௩, சித்திரை May '82 [பரல்-௯

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௬ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௩, சித்திரை<br>மே 1982 | பரல் ௬ |
| --- | --- | --- |


## உலக இந்து சமய மாநாடு

உலக மக்களிடையே சமயம் என்பது பெரும்பாலோரின் வாழ்க்கையோடு இணைந்த ஒன்றாகும். சமயப்பற்று இல்லாதவர் மிகக் குறைவு. மானிடர் ஒவ்வொருவரும் தாம் சார்ந்திருக்கின்ற சமயத்தின்மேல் பற்றுக்கொள்வது தவறில்லை. ஆனால் அதுவே வெறியாக மாறும்போதுதான் பூசல்கள் மிகுகின்றன. அமைதி யான வாழ்க்கைச் சூழலை உருக்குலைக்கும் பூசல்கள் தோன்றாம லிருப்பது நல்லது. அத்தகைய சூழல்கள் ஏற்படாத வண்ணம் சமயப் பெரியோர்கள் அவ்வப்போது கூடி உலக அமைதியைக் காத்தல் வேண்டும். அவ்வகையில் அண்மையில் இலங்கையில் நடைபெற்ற உலக இந்து சமய மாநாடு உலக ஒற்றுமையைக் காப்பாற்றப் பெரிதும் துணைபுரிந்துள்ளது.

இந்து சமயம் இந்திய நாட்டில் தோன்றியதாயினும் இன்று கிழக்காசிய நாடுகளனைத்திலும் பரவியுள்ளது. இச் சமயம் தோன்றிய இந்திய நாட்டில் இம் மாநாடு நடவாதிருக்க இலங்கை முதற்கண் இம் மாநாட்டைத் திட்டமிட்டு வெற்றியுடன் நடத்தியிருப்பது பெரிதும் பாராட்டுக்குரியதாகும். இந்து சமயம் தோன்றிய இந்திய நாடு இன்று சமயச் சார்பற்ற நாடு எனத் தன்னை அரசியல் சட்டப்படி அறிவித்துள்ளது. இந் நிலையில் பௌத்த சமய ஆதிக்கம் பெற்ற இலங்கை அரசு இந்து சமய மாநாட்டைச் சிறப்புற அரசுப் பொறுப்பேற்ற மாநாடாக நடத்தி யிருப்பது அவ்வரசின் பெருந்தன்மையையும் சமயப் பொறையை யும் காட்டுகிறது. இவ் வரும் பண்புக்கு அவ் வரசை எவ்வளவு போற்றினும் தகும்.

முதன்முதலாக ஏற்பாடு செய்யப்பெற்ற இம் மாநாடு ஏப்ரல் 21 முதல் 24 வரை நான்கு நாட்கள் இலங்கையின் தலைநகரான கொழும்பு மாநகரில் மிகச் சிறப்பாக நடைபெற்றுள்ளது. முதல் நாள் மாலை மாநாட்டின் தொடக்க விழாவில் திருமறை ஊர்வலமும் சமயச் சிறப்புகளை எடுத்துக்காட்டும் அலங்கார வண்டிகளின் அணிவகுப்பும் நடைபெற்றது. அன்று மாலை அணிவகுப்பிற்குப்பின் இலங்கைக் குடியரசுத் தலைவர் மாண்பமை ஜே. ஆர். ஜெயவர்த்தன அவர்கள் மாநாட்டைத் தொடங்கி வைத்தார்.

மூன்று நாள் நிகழ்ச்சிகளும் கொழும்பு மாநகரிலுள்ள அழகிய மண்டபமான 'பண்டார நாயகா நினைவு மன்றத்'தில் நடைபெற்றன. 1500 பேர் அமரக்கூடிய அம் மண்டபம் இது போன்ற அனைத்துலக மாநாடுகள் நடத்துவதற்கு ஏற்ற இடமாகும். அம் மண்டபத்தில் அமைந்திருந்த ஆறு அரங்குகளில் தனித்தனிக் கருத்தரங்குகள் நடைபெற்றன. நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் மாநாட்டில் படிக்கப்பெற்றன.

மாநாட்டிற்கு உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து 500க்கு மேற்பட்ட பேராளர்கள் வருகை தந்தனர். தமிழகத்திலிருந்து பெரும்பாலோர் கலந்துகொண்டனர். இந்தியாவிலிருந்தும் நேபாளத்திலிருந்தும் பல்வேறு துறவிகள் மாநாட்டில் கலந்து கொண்டு இந்து சமயப் பேருண்மைகளை உலகறியப் பரப்பியமை சிறப்புக்குரியதாகும்.

இம் மாநாடு முடிவு நாளில் இலங்கைப் பிரதமர் மாண்புமிகு ஆர். பிரேமதாசா அவர்கள் முடிவுரை நிகழ்த்தி மாநாட்டைச் சிறப்பித்தார்கள்.

இந்த அளவு மாநாடு மிகச் சிறப்பாக நடைபெறுதற்கு முழுக்க முழுக்கக் காரணராக இருந்தவர் இலங்கை இந்துமத விவகாரத்துறை அமைச்சர் மாண்புமிகு செ. இராஜதுரை அவர்கள் ஆவர். ஓராண்டுக்கு மேலாக இரவு பகல் பாராது இலங்கைக்கும் இந்தியாவிற்குமிடையே பறந்துபறந்து பணிகளையாற்றி வந்தார். இம் மாநாட்டின் வெற்றி அந்தத் தனி ஒருவரையே சாரும். எனினும் அவருக்குத் துணையாக இருந்த இலங்கைக் குடியரசுத் தலைவர், தலைமை அமைச்சர், மற்றும் அரசுத்துறை அதிகாரிகள் அனைவரும் பாராட்டுக்குரியவர்களாவர். மாநாட்டிற்கு வந்திருந்த பேராளர்கள் அனைவருக்கும் உறைதற்கு வசதியான இடங்களையும் சுவைப்பதற்கு அருமையான உணவையும் ஆங்காங்குச் சென்று காண்பதற்கு அரிய

சுற்றுலாப் பயணங்களையும் ஏற்பாடு செய்து பெரும்பணியாற்றி யிருந்தார்கள். அளவில் சிறிதான ஒரு நாட்டில் உலகளாவிய மாநாடு ஒன்றைக் குறைந்த பொருள் செலவில் நிறைந்த சிறப்புடன் நடத்திக் காட்டிய இலங்கைப் பேரரசின் பேருள்ளத்தையும் பெருந்திறனையும் எண்ணி மகிழ்கின்றோம்.

இம் மாநாட்டின் பயனாக 'அகில உலக இந்து சமய ஆராய்ச்சி நிலையம்' ஒன்று அமையவிருப்பது வரவேற்கத்தக்கது. அந் நிலையம் எந்த நாட்டில் அமையினும் சரி; அதற்கு உலக முழுவதுமுள்ள இந்து சமயப் பெருமக்கள் துணை நிற்க வேண்டும்.

பார் வியக்கும்வண்ணம் இம் மாநாட்டை நடத்தி முடித்த இலங்கைப் பேரரசு வாழ்க. வாழ்க அமைச்சர் இராஜதுரை அவர்களின் பெரும்பணி.

---

## எல்லாம் நிறைந்த மதம்

உலகம் உள்பொருளாதல் சாருவாகத்தானும், அறிவுஞ் சடமும் வேறு வேறுதல் பௌத்தத்தானும், உயிரும் இருவினையும் உளவாதல் சமணத்தானும், கடவுள் அருவநிலையினராய் நிற்றல் மாயாவாதத்தானும், கடவுள் உருவத்திரு மேனியு முடையராதல் வைணவத்தானும் பெறப்படுகின்றனவாகலின் இவை யனைத்தும் இந்துசமயப் பிரிவுகளாதற்கு இயைந்தனவேயாம். மற்று இக் கொள்கைகளெல்லாம் தன்கண் முழுதும் அடங்கக்கொண்டு விளங்கும் இந்துசமயந் தான் சிறிதாயினுஞ் சுருங்கும் இயல்பிற்றுதலின்றித் தன்கட் பிரிந்த சமயங்களுமாய் அவற்றின் வேறுமாய் மேற்பட்டுத் தோன்றல் பெரிதும் உற்று நோக்கற்பால தொன்றும்; இது தன்னிற் பிரிவான மதங்களில் உள்ள குறைகளை யெல்லாம் நிரப்பித் தான் எல்லா நிறைவு முடைத்தாய்ப் பொலிகின்றது.

—மறைமலையடிகள்.

சைவசித்தாந்த ஞானபோதம், பக். கூ

# 'சுரம்–ஜுரம்–சுரம்'

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

ஒருவருக்குக் காய்ச்சல் நோய் வந்தால் அவரிடம், 'ஜுரம் எப்படி இருக்கிறது?' என்று வினவுவதும், அதற்கு அவர் 'ஜுரம் இறங்கிவிட்டது' என்றோ 'ஜுரம் இன்னும் வாட்டுகிறது' என்றோ மறுமொழி கூறுவதும் நாம் கேட்பனவே.

காய்ச்சல் என்பது போலவே 'சுரம்' என்பதும் பழந்தமிழ்ச் சொல்லே! எனினும் 'ஜுரம்' என்றே எவரும் சொல்லியும் எழுதியும் வருதலால், அது வடசொல் என்ற முடிவிலேயே தெளிவுடையவரும் அமைந்துவிட்டனர். 'சுரம்' என்று எழுதுபவரையும் அயல் எழுத்தை விலக்கித் தமிழ் இயல்புக்கு ஏற்ற வாறு எழுதுபவராகவே எண்ணி, ஒரு புறப்பார்வையோ அல்லது ஓர் அகப்பார்வையோ பார்க்கின்றனர்.

சுரம் என்னும் செந்தமிழ்ச் சொல், எப்படி வட சொல்லாகக் காட்சி வழங்குகிறது? நம் வீட்டுக் குழந்தைக்கு மாற்றுச் சட்டை மாட்டி, வேற்றுக் கோலம் புனைந்து வேறொருவர் ஏய்த்ததுபோல, ஓர் எழுத்தை மாற்றி வேற்றெழுத்தைப் புகுத்தியதன் விளைவால் நேர்ந்ததேயாம். இந்த 'ஜுரம்' தமிழ்மொழிக்குச் சுரமாக வல்லவோ அமைந்துவிட்டது! நோய்ச் சுரத்தை மருந்தால் ஒழிக்கலாம். இந்த ஜுரத்தைத் தெளிந்த அறிவினால் அன்றி ஒழிக்க முடியாதே! ஆயும் அறிவுக்கு, அழுத்தமான திரையும் அல்லவோ வழிவழியாகப் போடப்பெற்று வந்திருக்கிறது!

சுரம் என்னும் சொல் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது. தொகை நூல்களிலும் மிகுதியாக இடம் பெற்றுள்ளது. சுரத்து உய்த்தல், சுரநடை, சுரத்திடை அழுங்கல், சுரத்திடைக் கண்டோர் கூறல் இன்னபல துறைகளை அகத்தொகை நூல்களும் பிற்காலக் கோவை நூல்களும் கூறும்.

சுரம் என்பதற்குப் பழம் பொருள் 'பாலை நிலம்' என்பதும், 'பாலை நில வழி' என்பதுமாம். இச் சுரம் என்பது 'சுரன்' என வழங்கப்பெறுதலும் வழக்காறே. நலம், நிலம், அறம், வரம் என்பன முறையே, நலன், நிலன், அறன், வரன் என வழங்கப் பெறுதல் போல்வதே அது.

நீரின்மை, நிழலின்மை, எரிபரவுதல், ஓரறிவுயிரும் உய்யாமை என்பனவாம் அவலங்களும் புலவர்களால் பாடுபுகழ்

பெற்றன. பற்றி எரியும் சுரமே எனினும் புலமைப் பாடல்பெற்ற அளவில், அது பயில்வார்க்குத் தண்ணிதாய் அமைந்து விடுவதை இலக்கியச் சுவைஞர் நன்கனம் அறிவர்.

'சுடர் சுட்ட சுரம்' என்கிறது புறம் (136). 'அழலன்ன வெம்மை' என்கிறது கலி. 'நிழலுரு விழந்த வேனிற்' சுரத்தை விளக்குகின்றது மதுரைக்காஞ்சி (313-4). நினைத்தாலும் சொன்னாலும் குறித்தாலும் நடுக்கம் உண்டாம் என்பதைச் 'சுட்டினும் பனிக்கும் சுரம்' என்று சுட்டி அமைகின்றது மலைபடுகடாம் (398). இம் மலைபடுகடாத்தின் குறிப்பை வாங்கிக்கொண்ட கம்பர், 'தினையும் நெஞ்சமும் சுடுவதோர் நெடுஞ்சுரம்' (வனம்புகு. 38) என்பதுடன், 'எரிசுடர்க் கடவுளும் கருதின் வேம்' (தாடகை. 5) என்றும் கூறினர்.

இனிச் செயங்கொண்டாரோ, தாம் புனைந்துரைக்கும் பாலையின் ஓரோ ஒரு மணலை எடுத்து அதனைக் கடலில் போட்டிருந்தால் இராமன் கடலில் அணைகட்ட வேண்டியதே இருந்திருக்காது; கடல் நீர் முழுவதையும் அவ்வொரு மணலே உறிஞ்சி வற்ற வைத்திருக்கும் என்று புனைந்தார்.

சுரம் என்னும் சொல் வெப்பத்தைக் குறிப்பது எப்படி? அதை அறிந்தால்தானே, காய்ச்சலை அச்சொல் குறிக்குமா என்பதை அறிந்துகொள்ள முடியும்!

'சுள்' என்று வெயில் அடிப்பதை எவரே அறியார்? வெயிலடிப்பு மட்டுமா 'சுள்' என்று அடிக்கிறது! வளாறு, தடி முதலியவற்றால் அடிப்பதும் 'சுள்' என்றும், 'சுளீர்' என்றும், 'சுள்ளாப்பாக' என்றும் சொல்லப்பெறுவதாயிற்றே! தினவு எடுத்தோ, உடல் எரிவுண்டோ, செந்தட்டி முதலியவை பட்டோ எரியுண்டானால் 'சுள்ளுச் சுள்ளு' என்று எரிகின்றது என்று கூறுவதை இன்றும் நாட்டுப்புறங்களில் கேட்கக் கூடுமே!

வெயில் உறைத்தல்போல உறைக்கும் மிளகாய்க்கும், மிளகாய், மிளகு ஆகியவை கலந்த பொருளுக்கும் 'சுள்ளாப்பு' என்னும் பெயர் வழக்கில் உண்டு. மதுக்குடியர் வெறிக்குத் துணையுறுத்தும் துணைப்பொருள் அல்லது கறிப்புப் பொருளுக்குச் 'சுள்ளாப்பு' என்னும் பெயருண்மை அகரமுதலிகளிலும் இடம் பெற்றதேயாம். அம்மட்டோ? மதுவெறி சுள்ளென்று ஏறுவதாகக் குடிவேட்கையர் கூறிக் குளிர்கின்றனரல்லரோ!

வெயில் வாட்டுதலால் காய்ந்துபோன குச்சி, பச்சை மரத்தில் ஒட்டிக்கொண்டு இருந்தால்கூடச் 'சுள்ளி' என்றன்றோ

பெயர் பெறுகின்றது! முதிர்ந்த புளிய மரத்தின் பட்டை யுலர்ந்து பக்குவிட்டதற்கும் சுள்ளி என்பது பெயரே. சுள்ளல் என்பதும் சுள்ளியேயாம். உடனே பற்றவைத்துச் சமைத்தற்குச் 'சுள்ளி பொறுக்குதல்' சிற்றூர்ச் சிறூர் பணிகளில் தலையாய ஒன்றும்.

சுள்ளெனக் கடித்துத் துன்புறுத்தும் சில உயிரிகள் சுள்ளுப் பூச்சி, சுள்ளெறும்பு, சுள்ளாஞ் சுருக்கு, சுள்விடுவான் என்னும் பெயர்களால் வழங்கப்பெறுகின்றன.

வெப்பம், உறைப்பு, வலி முதலிய பொருள் தந்த 'சுள்' என்னும் சொல் மேலும் பொருளால் விரிந்து 'சினம்' என்பதையும் சுட்டுவதாயிற்று. 'சுள்ளம்' என்பதும் சினம் என்னும் பொருள் தருவதாயிற்று. 'சுள்ளாப்பித்தல்' என்பதற்கு அடித்தல், உறைத்தல், எரித்தல், சூடு காட்டல், சுருக்கேற்றல் முதலிய பொருள்கள் பின்னே கிளைத்தன.

சுள்ளென்று உறைக்கப் பற்றிப் பிடிக்குமாறு அறையப் பெறும் மரத்து ஆணி 'சுள்ளாணி' எனப் பெயர் பெறும். கைம் மரத்தில் சுள்ளாணிக் குச்சு உண்டு. கதவு நிலைகளின் பூட்டு வாய்ப் பொருத்துகளுக்குச் சுள்ளாணி வைத்து இறுக்கி இழைப்பதைத் தச்சுத் தொழிலில் காணலாம். சுள்ளாணியாகப் பெரும்பாலும் கல் மூங்கில் பிளாச்சுகளையே பயன்படுத்துவர். மூங்கிலுக்குச் 'சுண்டகம்' என்னும் பெயர் உண்மை கருதத்தக்கது.

சுள் வழியாகத் தோன்றிய ஒரு சொல் 'சுளுந்து' ஆகும். அது 'சூந்து' என்றும் இடைக் குறைந்து முதனீண்டு வழங்கும். காய்ந்த அல்லது உலர்ந்த தட்டைகளையும் சுள்ளிகளையும் சேர்த்துக் கட்டித் தீமூட்டிச் சுழற்றும் ஒருவகை விளையாட்டே சுளுந்து ஆகும். கார்த்திகைத் திருவிழா, பொங்கல் விழா, விளக்கு வரிசை விழா (தீபாவளி) ஆகிய விழாக்களின்போது சுளுந்து விளையாடுதலைச் சிற்றூர்களில் இப்பொழுதும் காணலாம்.

தீமூட்டிச் சூடேற்றிப் பொருள்களை உண்டாக்கும் பழம் பணிக்களங்கள் 'சுள்ளை' என வழங்கப்பெற்றன. அவை 'பானைச் சுள்ளை', 'செங்கல் சுள்ளை', 'சுண்ணாம்புச் சுள்ளை' என்பன. சுள்ளை என்பது 'சூளை' என்றும் வழங்கப்பெறும். சூளைப் பெயராலேயே அமைந்த ஊர்களும் குடியிருப்புகளும் உண்மை முந்து அவை சூளையாயிருந்தமையைப் புலப்படுத்தும் சான்றுகளாம்.

காய்ந்து உலரும் பொருள் சுருங்குதல் கண்கூடு. ஆதலால் 'சுள்ளல்' என்பதற்குச் சிறுமைப்பொருளும் உண்டாயிற்று.

அதனால், அகர முதலிகள் 'சுள்ளல்' என்பதற்குப் 'பருமையற்றது' என்றும், 'சுள்ளலி' என்பதற்கு 'உயரத்திற்குத் தக்க பருமை யற்றது' என்றும் பொருள் கூறுகின்றன.

சுள் என்பது சுள்ளு என்றாகிச் சுண்டு என்றும் மாறும். அப்பொழுதும் அதன் அடிப் பொருளான வெப்பம் சினம் சிறுமை முதலியவும் தொடரும். கல்லையும் கிளிஞ்சில் முதலியவற்றையும் சுட்டெரித்து நீறாக்குவதால் கிடைப்பது சுண்ணம், சுண்ணாம்பு என்பன. சுண்ணாம்பின் பயன் நாடறிந்தது. சுண்ண வெண்ணீறு, இறைமைப் பொருளாயிற்று. சுண்ணமிடித்தல் கலைத் திறம் திருத்தக்க தேவராலும் ஆளுடைய அடிகளாராலும் பாடு புகழ் பெற்றது.

உலர்ந்து வற்றலாகிப் பயன்படும் ஒருவகைக் காயைத் தரும் செடி 'சுண்டைச் செடி' எனப் பெறுவதும், அதன் காய், சுண்டைக் காய் எனப் பெறுவதும், அதன் வற்றல், சுண்டைவற்றல் எனப் பெறுவதும், மீண்டும் சுடவைத்த கறியும் குழம்பும் சுண்டைக் கறி சுண்டைக் குழம்பு எனப் பெறுவதும், வற்றக் காய்ச்சுதல் 'சுண்டக் காய்ச்சுதல்' எனப் பெறுவதும் வழக்காறே. சுண்டற் கடலையை அறியார் எவர்? சுண்டல் கிடைக்கும் என்றுகூடக் கோயில் களில் கூடும் கூட்டமும் உண்டன்றோ!

நீரை மிகுதியும் இஞ்சி (இழுத்து) வாளிப்பாக வளர்தலால் இஞ்சிப் பெயர் பெற்ற மூலப்பொருள், உலர்ந்து சுண்டிப் போதலால் 'சுண்டி' என்றும் 'சுண்டியம்' என்றும் பெயர் பெறும். சுக்கு என்பதும் அதன் பெயரே. சுக்கல் என்பது காய்தல். 'சுக்கல் சுக்கல், சுக்கான் பாறை, சுக்கானீறு (சுண்ணாம்புக் கல் நீறு) சுக்கான் கீரை (புளிக் கீரை, புளிச்சக் கீரை) என்ப வற்றைக் கருதுக.

சுண்டு என்பதற்குச் சிறுமைப் பொருள் உண்மையைச் சுண்டெலி, சுண்டு விரல், சுண்டு வில், சுண்டு கயிறு, சுண்டன் (மூஞ்சூறு) சுண்டாங்கி (சிறிது) சுண்டிகை (உள் நாக்கு) என்ப வற்றால் கண்டுகொள்க.

கதிரோன் வெப்பத்தின் வழியே பிறந்த சுள் என்னும் சொல், தீயின் வெப்பத்திற்கு மாறுங்கால் 'சுர்' என்னும் ஒலிக் குறிப்புச் சொல்லாகி மிகப் பல சொற்களாக விரிந்துளதாம். 'சுர்' வழியே வரும் சொற்களைக் காணின் சுரத்தின் மூலம் மிகமிகத் தெளிவாகும்.	(தொடரும்)

———

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(முன் இதழ் ௬௭அஆம் பக்கத் தொடர்ச்சி)

ஐந்தாவது சிந்து 'தோழி தலைவி நிலை கூறித் தலைவனை வேண்டல்' என்ற தலைப்பைக் கொண்டது. தலைவிக்காகத் தலைவனிடம் தூது செல்லும் தோழி முகமன் கூறித் தலைவன் புகழ் பாடுகிருள். வாழ்த்துரையிலேயே அன்பர்களை ஆட் கொள்ளும் தகைமையன், எனவே தலைவியின் நிலை கண்டிரங்குவான் என்ற உட்பொருளை உணர்த்துகிருள். நல்ல வரை அணைத்து அல்லவரைத் துரத்துபவன் தலைவனுகிய முருகன்.

"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்."

அடைக்கலம் நாடி வருபவர்க் கருள்செய்து நல்லவருக் கல்லல் விளைவிப்போரை எரித்துவிடும் வெம்மைக் கதிரவன்—முருகன். அவன் திருவடித் தாமரையே புகலிடம் என்ற அன்பன்பால் அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும். ஆறுதல் அளிக்கும் ஆறுமுகம் காட்சி தரும். சிவஞானபுரத்துறை வேலவன் பூவலயன் நான்முகன் ஆதி புங்கவர்க் காரணம் ஓதி ஐயம் போக விளக்கிய சோதி. அறியாமையை இருளுக்கும் அறிவை ஒளிக்கும் ஒப்புமை காட்டுதல் மரபு. அருட் பிழம்பாகிய இறைவன் ஒளிப் பிழம்பாய்த் தோன்றி இருட் படலத்தைக் கிழித் தெறிகிருன்.

"ஆதித் தனிக்கோலம் ஆனான் அடியவற்காச்
சோதித் திருத் தூணில் தோன்றினன்"

எனப் பாடுவார் வெண்பாவிற் புகழேந்தி.

"அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகிக்
கருணைகூர் முகங்க ளாறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலக முய்ய."

என்று கந்தபுராணம் கூறும்.

தந்தை முன் இனிய கனிக்காக வாதிட்ட புனிதன். முயற்சி கனியவில்லை யென்றாலும் முக்கட்டிருத் தாதையை மகிழ்வித்த வன்தானே. 'வந்தனம் யான் புரிந்தேன்' எனத் தோழி தூது வந்த சேதி சொல்லத் தொடங்குகிறாள்.

தூதுரைப்பாரில், தலைவிக்கும் தலைவனுக்கும் இடையே உள்ள தோழி, ஓர் அரசின் செயலைப் பிறிதோர் அரசுக்கு உரைப் பவர் ஆகிய இருவர் குறிப்பிடத்தக்கவர். காதலுக்குள்ளானவர் மேகம், வண்டு, தென்றல், கிளி ஆகியவற்றையும் மேலும் பலரையும் தூது கொண்டு செல்லப் பயன்படுத்துவர்.

"அன்பு அறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று."

என்று அரசுத் தூதுவர்க்குத் திருக்குறள் விதித்த இலக்கணம் காதற் செய்தி சுமந்து செல்வோர்க்கும் பொருந்தும். சிவஞான புரத்து முருகன்பால் தலைவியின் ஆற்றாமையைச் சொல்லச் சென்ற தோழியிடம் தலைவியின்மீதுள்ள அன்பும் கூர்த்த அறிவும் உரைக்கும் திறனும் உள்ளன. தோழியின் முன்னுரை தலைவன் குணநலனைப் போற்றி வணக்கம் செலுத்துகிறது. வந்தனம் புரிந்த தோழி மங்கை நல்லாளொருத்தியின் அழகைச் சொல்லோவியம் தீட்டுகிறாள் :

மஞ்சுநிகர்க் குழமேல் லோதி—சிறு
வாணுதல் திங்களின் பாதி—குழை
வார்செவி வள்ளையின் ஜாதி—கதிர்

வடிவேல்விழி துடி நாலிடை பிடிவாரண மடிசேர் நடை
மாமலை யாமிரு கொங்கை—கொண்டுன்
வாகனம் போல்வரு மங்கை

முடி தொடங்கி அடிவரை இனிக்கும் தமிழில் தலைவியின் எழிலைப் பாடுகிறாள் தோழி. பெண்ணழகுப் பொலிவை முதற்கண் அவளு டைய கூந்தல் காட்டும்.

'மஞ்சொக்கும் அளகஓதி மழையொக்கும் வடித்த கூந்தல்'

என்பான் கம்பன். 'கற்றைக் குழல் பார்வதி' என்று மலைமகளைச் சித்தர் உரைப்பார். கலிங்கத்துப் போரில் வெற்றி வீரனாய்த் திரும்பும் கணவன் கடை திறக்கும் மனைவியை விளிக்கும்பொழுது,

"சோருகு கொந்தளகம் ஒருகை மேலலைய
ஒருகை மேலைசெய் துகிலொடே

திருவ னந்தவினும் முகம லர்ந்துவரு
தெரிவை மீர் கடைகள் திறமினோ.''

என்பான். அவன் மனக்கண்முன் முதலில் தோன்றுவது மனைவியின் அளகபாரம்.

''முருகிற் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழன் மடவீர் செம்பொற் கபாடம் திறமினோ.''

என்னும் போதும் காதலன் முடியழகில் ஈடுபடுகிறான்.

''அங்கண் விசும்பில் அகல்நிலாக் காண்டல் இனிது,''

என்று இனியது நாற்பதின் ஆசிரியர் தமிழாசிரியர் மகனார் பூதஞ் சேந்தனார் சொல்வார். அரை நிலாவைப் பெயர்த்துத் தலைவியின் முகத்தில் அப்பினால் அதுவே அவளின் நெற்றி. செவி வள்ளையின் வகையைச் சார்ந்தது. வேல் விழியும் துடியிடையும் பிடிநடையும் அவளுக்குச் சொந்தம். 'நஞ்சில் தோய்த்துக் கொலை தீற்றும் நயன வேலை'ப் பாடிப் புலவர் ஓய்ந்துவிட்டனரோ? நடத்து குகன்வேல் பருத்த முலை, சிறுத்த இடை, கறுத்த குழல், வெளுத்த நகை, மறச்சிறுமி விழிக்கு நிகராகுமன்றோ! மால் மருகன் வேல் முருகன் கைவேலை எடுத்து இருகூறுகளாகப் பிளந்து அமைந்தன கண்கள்.

''அறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியு
மிறுமுறை காணு மியல்பினி னன்றே
யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது''

என்று கண்ணகியின் கண்களைப் பற்றிச் சிலம்பு பாடும்.

இடையோ சங்கதம் என்று சிலம்பு புலம்பும், அத்தகைய துடியிடையாள் தலைவி. ஆனால் அவள் நடையோ பெண் யானையின் நடையைப் போன்றது. 'வடிவேல் விழி, துடிநூலிடை, பிடிவாரண மடிசேர் நடை' என்று பாண்டித்துரைத் தேவர் தலைவியின் கூற்றாக ஏற்றிய சொற்கள் செவிக்கின்பம் தருபவை. பிடிநடையின் அழகைக் கண்டு நெஞ்சைப் பறிகொடுத்தார் திருநாவுக்கரசர். 'கண்டேன் அவன் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்' என்று இறைவனையும் அன்னையையும் 'காதல் மடப் பிடியோடும் களிறு வருவன கண்டேன்' என்று மெய்ம் மறந்தன்றோ பாடுகிறார்! அழகு சிந்தும் நடை பெண்ணுக் கணிகலன். அவ்வாறின்றி நடந்து சென்ற பிடியைக் கடிகின்றாள் காதல் வயப்பட்ட பெண்ணொருத்தி :

"எலாஅ மடப்பிடியே யெங்கூடற் கோமான்
புலாஅ னெடுநல்வேன் மாற — னுலாஅங்காற்
பைய நடக்கவுந் தேற்ருயா னின்பெண்மை
யையப் படுவ துடைத்து."   (முத்தொள்ளாயிரம்)

"கூடற்பெருமான் உலாவரும்போது மெல்ல நடக்கத் தெரியாத உன் பெண்மையிலேயே எனக்கு ஐயம் தோன்றுகிறது" என்ற சுடுசொற்களை ஏமாற்றமடைந்த பெண் உதிர்க்கின்ருள்.

'விம்மிப் புடைத்த மார்புடையாள் உன் வாகனமாகிய மயில் போன்று வருகின்ருள்' என்று தோழி சொல்லித் தான் வந்ததன் காரணத்தை விளக்குகின்ருள். 'நேற்று மாலை நீ வரக்கண்டு மையல் கொண்டு, தன்னிலையிழந்து மாரன்கணை பொருது துடித்து வெட்கத்தைக் கக்கத்தில் வைத்து உன்னிடம் தூது செல்ல என்னைப் பணித்திட்டாள்' என்றும் சொல்லுகின்ருள் தோழி. 'வேல் விழியாள்' என்று முன்பு சொன்ன தோழி தலைவியை இப்பொழுது 'மானிகர் விழியாள்' என்று குறிக்கின்ருள். காதல் நோயால் பீடிக்கப்பட்டு மிரண்டு மருண்டு தலைவி விழிக்கின்ருள்.

திங்களுஞ் செங்கதிர் போலுமே—வந்து
செந்தழல் தூவுமென் மேலுமே—சற்றுந்
தேட்டமில் லையன்னம் பாலுமே—மலர்

செழுமங்கையி னகுபைந்தொடி நழுவும்படி மிகநைந்தனள்
சீறிவரும்புலி போலே—மந்த
மாருதம் வீசுதலாலே.

'தண்ணளி பரப்பும் வெண்ணிலா வெங்கதிரை வாரியிறைக்கின்ருன். அன்னம், பால் எதிலும் அவளுக்குத் தேட்டமில்லை; கைவளை சோர நைந்து விட்டாள். தென்றற்புலி வந்து அவள் மேல் பாய்கின்றது. 'மோகம் என்ற தாகம் நீ வந்தால் தணியும்', என்று தோழி தலைவனுக்குரைக்கின்ருள்.

தலைவனுக்குத் தோழி குறிப்பிடும் நங்கையைத் தெரியும். அவர்களிருவரும் முந்தின மாலை கூடியிருந்ததை இங்கிதமறிந்த தோழி தலைவனுக்குரைக்கவில்லை; ஆனுல்அவள் படும் பாட்டைச் சொல்லத் தவறவில்லை. அருகில் வந்தவரைத் தலைவி சீறுகின்ருள். வெல்லப் பாகும் கசக்கிற தென்கின்ருள்; தோழியிடம்கூட மனம் திறந்து பேசுகின்ருளில்லை. மாமரத்துக் குயில் காமன்றன் சின்னமன்ருே! அவ்வூது சின்னத்

தின் ஒலி கூரிய அம்பாய்த் தலைவியைத் தாக்குகின்றது. நாணத்தையும் விட்டுப் பிதற்றுகின்றாள் காமப்பித்தேறிய பெண்.

இக்கும தன்கணை மாரி—பல
எய்திடக் காமப்பித்தேறி—செயல்
யாதுமறந்தாளிந் நாரி.

என்று தலைவியின் நிலையைத் தோழி தலைவனாகிய முருகனுக்குரைக்கின்றாள்.

இக்குச் சிலைமாரன் இரக்கமில்லாதவன், மழையெனத் தன் கணைகளை ஏவுகின்றான். கனுவுள்ள கரும்பை வைத்திருக்கும் உருவிலானை உயிர் கொடுத் துலவும்படி, தமிழகச் சிற்பிகள் வடித்திருக்கின்றனர். தமிழ்நாட்டுக் கோயில்களில் காமனையும் அவன் இல்வாழ்க்கைத் துணைவி இரதியையும் கலையுணர்வுள்ளவர் கண்டுகளிக்கலாம். இவ்விருவர் பார்வையிலிருந்து சுசீந்திரம் தாணுமாலயப் பெருமாள் கோயிலுக்கும், கிருஷ்ணாபுரத்துக்கும், தென்காசி விசுவநாதர் கோயிலுக்கும், சங்கரன் கோயிலுக்கும், சீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலுக்கும், மதுரை ஆயிரக்கால் மண்டபத்துக்கும் செல்பவர் தப்ப முடியாது. கலைக்கண் கொண்டு நாட்டமுள்ளவர் பார்த்தாலும் காதலரை அவன் படுத்தும்பாட்டை என்னென்றுரைப்பது! தலைவன் தலைவி இணைந்தால் மாரன் கணை வலியிழக்கும். தலைவன் தனியாய் வந்து தலைவியின் தனிமையைப் போக்கியுதவச் சிவஞானபுரத்து முருகனாகிய தலைவனைத் தோழி வேண்டுகின்றாள்:

தேவரை யாள்கருணாகரா—துஷ்டர்
சேனையை வாட்டுந் திவாகரா—உபர்
தெய்வானை வள்ளி மனோகரா—நல்ல
நிகழ்தாமரை நிகராகிய தருசேவடி புகலாயடை
தினர்களுக்கனுகூலா சிவ
ஞானபுரத்துறை வேலா.

பூவளர் நான்முக னாதியே—யான
புங்கவர்க் காரண மோதியே—ஐயம்
போகவிளக்கிய சோதியே—உயர்
புனிதாமுனை மினிதாகிய கனிதாவென நனிதாதைதன்
புந்திமகிழ்வித்த தேவனே—பல
வந்தனம் யான்புரிந் தேனே.

மஞ்சுசிகர்க்குமேல் லோதி—பிறை
வானுதல் நங்களின் பாதி—முமை
வார்செவி வள்ளையின் ஜாதி—கதிர்

வடிவேல்விழி துடி நூலிடை பிடிவாரண மடிசேர்நடை
மாமலை யாமிரு கொங்கை—கொண்டுன்
வாகனம் போல்வரு மங்கை.

வஞ்சியை நேரிடை மாது—நேற்று
மாலையில் நீவரும் போது—கண்டு
மையல் கொண் டாளுன் றன் மீது—கான
வலைமானிகர் விழிபாளணி கலைசோரவு முலைமீறவு
மாரன்க ணைசகி யாது—சென்று
கூறவெ னைவிட்டாள் தூது.

திங்களுஞ் செங்கதிர் போலுமே—வந்து
செந்தழல் தாவுமென் மேலுமே—சற்றுந்
தேட்டமில் லையன்னம் பாலுமே—மலர்
செழுமங்கையி னகுழைந்தொடி நழுவும்படி மிகநைந்தனள்
சீறிவ ரும்புலி போலே—மந்த
மாருதம் வீசுத லாலே.

கொங்கைக்கு டங்களைப் பிடித்தே—முத்தங்
கொஞ்சியி ருகன்னங் கடித்தே—கனிக்
கோவையி தழ்த்தேனைக் குடித்தே—நன்றாய்க்
கூடிப்பல விதலீலைகள் நாடித்தரு மகனூலது
கூறுமு றையேசம் போகம்—செய்தால்
தீருமவள் கொண்ட மோகம்

பக்கத்தில் வந்தோரை யேசுவாள்—வெல்லப்
பாகுங்க சப்பென்று பேசுவாள்—சொந்தப்
பாங்கிக்கும் மெய் சொல்லக் கூசுவாள்—உயர்
பலமாமர மிலமாயுறை நலமார்குயி லொலிவார் செவி
பட்டிடுங் கூரிய பாணமே—யென்று
விட்டொழிந் தாள்கொண்ட நாணமே.

இக்கும தன்கணை மாரி—பல
எய்திடக் காமப் பித்தேறி—செயல்
யாதும றந்தாளிந் நாரி—அங்கு
ஏயுங்கனி வாயன்புட னியுந்தனி யாய்வந்திடில்
இன்பமு டன்கலந் துய்வாள்—சொல்லும்
முன்புநி னைந்தது செய்வாள்.

(தொடரும்)

———

# வேர்ச்சொற் கட்டுரைகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் ௯௭௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 'இல்'—துளைத்தற்கருத்து வேர்ச்சொல்

மேலையாரிய மொழிகளில், இளம் — இளது—இளப்பம் என்னும் சொல்வடிவே இடப் பக்கத்தைக் குறிக்கும் தியுத் தோனிய அடிச்சொல் lub (இளப்பம்) என்பதிலிருந்து luf என்னும் பிரீசிய வடிவாகிப் பின் t என்னும் பின்னொட்டு சேர்ந்து left எனத் திரிந்துள்ள நிலையை வலுப்படுத்தும் வகையில் ஆங்கிலச் சொற்பிறப்பியல் வல்லுநர் கீற்று பின்வருமாறு விளக்குகிறார் :

*E.* LEFT, a term applied to the (usually) weaker hand. (E) ME. left, lift, luft, Spelt left, Chaucer, C. T. 2955 (A 2593); lift, will. of Palerne, 2961; luft, P. Plowman, A. ii. 5; Layamon, 24461. Rare in As., which AS. the term winster instead; see Grein ii. 716. We do, however, find 'inanis, left,' in a Gloss (Mone, Quellen, i. 443), and the same MS. has senne for synne (sin ; so that left is the Kentish form of lyft, with the sense of 'worthless' or 'seak'; cf. AS. lyft—ādi, palsy. NFriesic leeft, leefter hond (left hand); Outzen, +MDu. luft, left (oudemans); Kilian also gives the form lucht. B. The t is a suffix; cf. EFries. luf, weak. All from Teut. base lub—; cf. Du. lubben, to geld. See Lib. (So H. Sweet; in Anglia, iii. 155; 1880) Der. left—handed,—ness.

இளக்கம்—மென்மை, தளர்ச்சி

இளக்கரி—தளர், பின்னிடு

இளக்காரம்—மனநெகிழ்ச்சி, தாழ்நிலை

இளக்கு (இள்+அக்கு)—நெகிழச்செய்

க. எள், எளெ; து. எளெ; தெ. எள, எல; துட., கோ. எள்

B. lax. Sum. lag—to be afraid, to be terrified. oax—lighten (decreasing in weight).

*L*. Langues—to be weak, faint, languish, physically and mentally.

lang—kor—faintness, feebleness, weariness languor.

laxo—to leave a space or interval between to mitigate, fall in price, slacken, relax.

relaxo—to make slack, to ease, lighten, alluviate. languid—slack, lax.

இலத்தீனச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்த வால்தே பெருமகனுர் leg என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு, lang—leng—leg (weak, soft, delicate) என்று இளம் என்னும் தமிழ்ச் சொல் திரிபான long என்னும் இலத்தீனச் சொல்லையே மூலமாகக் காட்டுவதை இவண் ஒப்பிட்டறிக.

இலத்தீனிலும் பழஞ்செருமானிய கிரேக்க மொழிகளிலும் இன்—இள—இளகு என்னும் தெளிவான தமிழ் வடிவம் மாறுத லின்றி அதே பொருளில் வழங்குதலைப் பின்வரும் சான்றுகளால் அறியலாம்.

*G*. geil—weak, soft, testicles in the loins. geil heit—lewdness.

செருமானிய மொழியில் ge என்னும் அசைநிலை முன் னொட்டை நீக்கினுல் 'இல், இள' நிலைச் சொல்லாய் நிற்றலைக் காண்க.

*GK*. lagnos—testicles as soft lagneia—lowdness.

*O. Irish*. lace—lewdness.

Welsh. Llace—weak, soft. E. sleek.

*MLG*. Lak—weak *Dutch*. Lake—weak.

900 *Bc. Hom. GK*. elleexa, *MG* legs—lag.

*Latvian*. legens—weak.

GK. lag aron—a thin broad cake.

lag arizoo—to make slack, lean.

laparos—slack, loose, relaxed.

lap—ara (in Iorian) lap aree = the soft part of the dody between the ribs and hips, the boins cf. L. ilias.

இளா—இடை.

L. iilia—the singular is found only in Grammar of Latin in the sense of soft, tende , weak, gentle, sweet, sing. softness. *pl.* the groin, the fold between the belly and the thigh; the womb of women, the shame region. the pubes.

*Celtic.* il, ilki, iliatus = the sole of the foot which is soft and has to be covered with shoes or sandals.

*O. Frisian.* ili. *NHG* lack—weak.

*Norwegian* laxo—thin. *ONorse.* lakr—bad. slakr—weak.

இல்—இள் = தாழ்தல், வீழ்தல், பொருந்தல், விரும்புதல், மேவல்

த. இள்—skt. ish = tenderness, love, desire, wish, long for, request, seek for, to want as a desideratum or greatly desired object.

*OG.* eiseoom—I ask. *MG.* heische.

*AS.* ascian—ask. *GK.* ill—tees.

*Rus.* iskati—to ask. *Lith.* jeskoti—to ask.

த. இள் = விரும்பு, கேள்.

இல்—வில்—வின்—வினு, தெ. வினு—கேள் த. வினவு—கேள்.

இல்—எல்—என்—என்னு—பேசு (என்றுன் = பேசினுன்).

இல்—வில்—விள்—பேசு (இல்—இள (பிள, வாய்திற)—இளி (வாய் திறத்தல்).

இள் = விருப்பம். இள்—இணே — இணே — விருப்பத்திற்குரிய மனேவி. யாழ்ப்பாணத்தார் தம் மனேவியாரை அன்புகனிய 'எணே' என விளிப்பதைக் காணலாம். (இணே—எணே).

இள்—எள்—ஏள்—ஏட்டை = விருப்பம் (பிங்.)

"ஏட்டைப்பட்டு" (சீவக. 1552. 1 உரை)

(தொடரும்)

———

# திருமூக்கீச்சரம்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எஸ்., டி ஓ.,]

(முன் இதழ் ௬ ௮௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

வீரவாதித்தன் என்ற சோழ மன்னன் ஒருவன் உலா வரும் போது, இறைவன் அருள் பெற்ற கோழியொன்று பறந்து சென்று அரசனுடைய யானையைத் தாக்க, யானை அலறி ஓடியது. சோழன் திகைத்தான். அப்போது வானவெளிக்குரல் ஒன்று, "அரசனே, உன் நகரில் ஒருபாலுள்ள வில்வ வனத்து விமலன் செய்த திருவிளையாடல் இது. இந் நகரின் பெருமையை விளக்கு வதற்காகச் செய்தது. இன்று முதல் இந் நகருக்குக் 'கோழி மாநகர்' என்று பெயரிடுக. நீயும் அவ் விறைவனைப் போற்றி வாழ்க" என்று கூறியது. வீரவாதித்தனும் அதுபோலவே செயலாற்றி உய்வு பெற்றதாகப் புராணம் பேசுகிறது. கோயில் தூண் ஒன்றிலும் அம்மன் கோயில் கீழ்ப்புறச் சுவரிலும் இக் கதையின் சிற்பங்களைக் காணலாம்.

வீரவாதித்தன் மகன் சூரவாதித்தனே இங்கு ஆதிகோயிலை எழுப்பியதாகப் புராணம் பேசுகிறது. சோழர்களின் வரலாற்று நூல்கள் எதிலும் வீரவாதித்தன், சூரவாதித்தன் என்ற பெயர் களைக் காணமுடியவில்லை. இந்தக் கோயிலின் தோற்றமும் வரலாறும் ஆய்வுக்குரியன. கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த சம்பந்தப் பெருமான் இக் கோயிலைப்பற்றிப் பதிகம் பாடியுள்ளார்:

"வெந்தநீறு மெய்யில் பூசுவர் ஆடுவர் வீங்கிருள்
வந்தெனரவ் வளை கொள்வதும் இங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன் னேரியன் செம்பியன் ஆக்கிய
எந்தைமூக்கிச் சரத்தடிகள் செய்கின்றதோர் ஏதமே."

இந்தப் பதிகத்தில் 'செம்பியன் ஆக்கிய' என்று வரும் வரியால் இக்கோயிலை எடுப்பித்தவன் சோழனே என்பது உறுதியாகின்றது. எந்தச் சோழன் எடுப்பித்திருக்க முடியும்? திருமங்கையாழ்வார் பாடிய திருநறையூர்ப் பதிகத்தில் கோச்செங்கணன் என்ற சோழ வேந்தன் எழுபது சிவன் கோயில்கள் கட்டியதாகக் குறித்துள் ளார். திருஞான சம்பந்தருக்கு முற்பட்ட சோழ மன்னர்களுள் யாரேனும் ஒருவரே இக் கோயிலை எடுப்பித்திருக்க வேண்டும். சங்க காலத்தில் வாழ்ந்த சோழ மன்னர்கள் யாரேனும் இத் திருப்

பணியைச் செய்திருப்பார்களேயானல், அது சங்கப் பாடல்களில் குறிக்கப்பெற்றிருக்கும். டாக்டர் மா. இராசமாணிக்கனர் தம் சோழர் வரலாற்றில் சோழன் கோச்செங்கணானின் காலத்தைக் கி. பி. ஐந்தாம் நூற்ருண்டின் இடைப்பகுதி என்று வரையறுத்துக் காட்டுகிருர். தருமபுர ஆதீன வெளியீடான திருஞானசம்பந்தர் தேவாரப் பதிப்பின் அடிக்குறிப்பில், 'கோச் செங்கட் சோழ நாயனுர் கட்டுவித்த மாடக்கோயில் ஆதலின் வேந்தன் மூக்கீச்சரம் எனப்பட்டது', என்று காணப்படுகின்றது. சங்ககால, இடைக் காலச் சோழர்களுள் கோச்செங்கட் சோழனே எழுபது சிவாலயங்கள் எடுப்பித்தவனுகச் சிறப்பிக்கப்படுவதாலும், அவன் காலம் சம்பந்தப் பெருமானுக்கு முற்பட்ட காலமென்று வரலாற்று ஆய்வாளர்களால் வரையறுக்கப்படுவதாலும், இத் திருவூரின் ஆதிகோயில் கோச்செங்கட் சோழனல் எடுப்பிக்கப் பட்டதாகக் கொள்ளலாம். அப்போது அது மண்டளியாக இருந்திருக்க வேண்டும்.

மகேந்திரவர்மனுக்குப் பிறகே தமிழ்நாட்டில் கற்றளிகள் எழுப்பப்பட்டன. பிற்காலச் சோழர்களில் ஒருவனுன ஆதித்த சோழன் காவிரியின் கரை முழுவதும் சிவன் கோயில்களைக் கட்டினுன் என்று அன்பில் செப்பேடுகள் கூறுகின்றன. திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் அவர்கள் தம்முடைய 'சோழர் கலைப்பாணி' என்ற நூலில், ஆதித்த சோழன் தன் காலத்தில் பல மண்டளிகளைக் கற்றளிகளாக மாற்றியமைத்தான் என்று சான்றுகள் காட்டி நிறுவுகின்றுர். அப்படி ஆதித்தனுல் கற்றளிகளாக மாற்றப்பட்ட கோயில்களுள் ஐவண்ணப் பெருமான் ஆலயமும் ஒன்ருக இருக்கலாம். ஆதித்தன் என்ற பெயர் புராண கதைகளில் 'சூரவாதித்தனுக' உருமாறியிருக்கலாம். இப்போதுள்ள புதிய கோயில் திருப்பணி ஆனமைக்கு முன்னர் இருந்த பழைய கோயிலில் இருந்து, சில கல்வெட்டுகள் அரசினரால் 1890ஆம் ஆண்டில் 51வது எண்ணிலும் 1907ஆம் ஆண்டில் 181 முதல் 184 வரையுள்ள எண்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளதாகத் தலவரலாறு கூறுகின்றது. இக் கல்வெட்டுகள் இப்போது காணப்பெருமை வருத்தத்திற்குரியது. திருப்பணி செய்த பெருமக்கள் அவற்றைப் பாதுகாக்காமல், படியெடுக்காமல் விட்டுவிட்டமை வருந்தத்தக்கது. இக் கல்வெட்டுகளில் ஒன்று ராசசேகரி வர்மனுடைய மூன்ருவது ஆட்சி ஆண்டில் கோயில் பூசைக்கு நிலங்கள் விடப்பட்ட செய்தியைத் தெரிவிப்பதாகத் தலவரலாற்றுக் குறிப்பு பேசுகிறது விசயாலயனின் மகனுன ஆதித்த சோழனுக்கு இராசகேசரி என்ற பட்டப்பெயர் உண்டு. இவன் மகன் முதலாம் பராந்தகனின் கல்வெட்டும் இக் கோயிலில் இருந்து கண்டெடுக்கப்



மூக்கீச்சரம் திருக்கோயிலில் காணப்படும், வேறெங்குங் காணப்பெறாத வியத்தகு சிற்பங்கள்

பெற்றுள்ளது. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு நோக்கும் போது, இக் கோயில் இக் கோச்செங்கட் சோழனுல் மண்டளி யாகக் கட்டப்பெற்றுப், பின்னர் ஆதித்த சோழனுல் கற்றளியாக் கப்பட்டிருக்கலாம் என்பது புலனுகும்.

இக் கற்றளி பின்னர்ப் பல காரணங்களால் சிதைவுற்று முழுவதும் அழிவுற்ற நிலையில் இருந்தது. அதைக் கண்டு மனம் பொருத அருள் வள்ளல் திருமிகு. தேவகோட்டை சித. முரு. முருகப்ப செட்டியார் அவர்களின் பெருமுயற்சியால் இக் கோயில் முழுமையாகப் புதுப்பிக்கப்பெற்று, 4—5—1922ஆம் ஆண்டில் குடமுழுக்கும் நடத்தப்பெற்றது. இப்போது நாம் பார்க்கும் கோயில் திரு. முருகப்ப செட்டியார் அவர்களின் முழுமை யான திருப்பணியாகும்.

அவரால் திருப்பணி செய்யப்பெற்ற அம்மன் கருவறைச் சுவரில் பல அழகிய சிற்பங்கள் உள்ளன. இவற்றுள் நம்மை வியக்க வைக்கும் சிற்பம், அச் சுவரின் கிழக்குப் பக்க மூலையில் உள்ள சைக்கிள். சிற்பமாகும். தமிழகத்தின் வேறெந்தக் கோயிலி லும் காணமுடியாத புதுமையாகும் இது. முழுமையான சைக்கிள் 1890ஆம் ஆண்டில்தான் உருவாக்கப்பெற்றதென்று கலைக்களஞ் சியக் குறிப்பு சொல்கின்றது. இக் கோயிலின் திருப்பணி முடி வடைந்த காலம் 1922ஆம் ஆண்டு. இந்த இடைப்பட்ட காலத்தில் சைக்கிள் தமிழகத்திற்கு வந்து அதைக்கண்டு மனம் பறிகொடுத்த சிற்பி ஒருவர் கல்தூணில் அதைத் தம் கைவண்ணமாக்கியிருக் கின்ருர். மிக அழகான இந்தச் சிற்பம் அந்தக் கோயிலில் இருப் பதையே பலரும் அறியாதிருந்தது எனக்கு வியப்பைத் தந்தது.

இத் திருவூர் பல தனிப் பெருமைகளை உடையது. புகழ்ச்சோழ நாயனர் தோன்றிய இடம். திருப்பாணுழ்வார் தோன்றி வைண வத்தை வளர்த்துச் சிறப்படைந்த பதி. சேர, சோழ, பாண் டியப் பெருவேந்தர்கள் ஒருங்கிணைந்து இறைவனை வழிபட்ட பதி இங்குள்ள செப்புத் திருமேனிகள் அழகானவை; அரிய வேலைப்பாடுகள் கொண்டவை. இக் கோயில் அம்மனைப்பற்றி மகா வித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காந்திமதி அம்மை பிள்ளைத் தமிழைப் பாடியருளியிருக்கிருர்கள். இந்தக் கோயிலைப்பற்றிய பல்வேறு வகையான புராண கதைகளை உள்ளடக்கிய உறையூர்ப் புராணமும் மகாவித்துவான் அவர் களால் இயற்றப்பெற்றுள்ளது.

———

# சித்த மருத்துவர்கள் சிந்தனைக்கு

[செல்வக் கண்ணன்]

சித்த மருத்துவம், பழந்தமிழ் மருத்துவம்; "நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும் வாய்நாடி வாய்ப்பச்" செய்யும் மருத்துவம்! நாடி பார்த்து உடற்கூறு அறிதல் அதன் தனிச் சிறப்பு; இயற்கை நெறியில் இயல்வதும் சித்த மருத்துவத்தின் தனிச் சிறப்பே! அப்பொழுதைத் தீர்வாக இல்லாமல், எப்பொழுதும் நோய் வாராது தடுப்பது சித்த மருத்துவத்தின் அடிப்படை. இத்தகு சீரிய மருத்துவ நெறியிலும் சில செய்திகள் ஆய்வுக்கு இடமாய் அமைந்துள. அவற்றை அறிஞர்கள் ஆய்ந்து வெளிப்படுத்தின் நலம் பயக்கும். இச் சிறு கட்டுரையில் மூன்று குறிப்புகளை மட்டுமே காட்டுவாம்.

க. 'வெற்றிலை பாக்குப் போடுதல் கேடுதரும்' என்பது இக்கால மருத்துவக் கொள்கை. ஆனால் சித்த மருத்துவம் வெற்றிலை பாக்குப் போடுதலைக் குற்றமாக்கவில்லை. வெற்றிலைக்கு முன்னர்ப் பாக்கினைப் போடுதலே குற்றம் என்கிறது. பெரும்பாலும் வெற்றிலையைப் பயன்படுத்துவோர் முதற்கண் பாக்கைப் போட்டு மென்று, பின்னர் வெற்றிலையைச் சேர்த்து மெல்லுதலையே காண்கிறோம். இவ்வாறு மெல்லுவதால் ஏற்படும் கேடு என்ன? இதற்குரிய மாற்றுமுறை என்ன? வெற்றிலை பாக்குப் போடுதல் ஏற்கத்தக்கதா? ஒதுக்கத்தக்கதா? தக்கதை எடுத்துக் கூறுதல் நாட்டு நலம் பயக்குமே!

வெற்றிலை போடுகையில், சுண்ணாம்பு வைத்த வெற்றிலையைப் பயன்படுத்தக் கூடாதாம். வெற்றிலைக் காம்பையும் நரம்பையும் பயன்படுத்தக் கூடாதாம்! இவற்றைப் 'பதார்த்த குண சிந்தாமணி' பகர்கின்றது:

"வெற்றிலைக்கு முன்னம் வெறும்பாக்கை வாயிலிட்டாற்
குற்ற முறும்; உறவோர் கூட்டம்போம்—வெற்றிலையை
முன்னிட்டுப் பாக்கருந்து மூதறிவோர் தம்மார்பின்
மன்னிட்டு வாழும்பூ மாது"

"நீற்றிலையும் மூக்கும் நெடிய நரம்புடனே
தீற்றும் புறவுரியும் தின்றக்கால்—மாற்றலரை
வெல்லப்போர் செய்யும் விறல்நெடுமால் ஆயிடினும்
செல்லப்போய் நிற்கும் திரு"

என்பவை அவை. (1469, 1370)

உ. உறங்கும்போது, காற்று குளிர் இவற்றின் தடுப்புக்காகப் போர்த்திக்கொள்ளுதல் எங்கும் எவருக்கும் பழக்கமானதே. ஆனால், முகமுழுவதும் மூடி, மூக்கையும் மறைத்துக்கொண்டு உறங்குதல் கேடே என்பது வெளிப்படையான உண்மை. எனினும், பதார்த்த குண சிந்தாமணி முக்காடு இட்டு உடல் முற்றும் மூடிப் படுத்தல் நன்மை செய்யும் என்கிறது. அனைவருக்கும் பயன்படும் இச் செய்திபற்றியும் ஆய்ந்து கருத்துரைத்தலும், அதனை வலியுறுத்துதலும் நலம் தருமே!

"முக்காடிட்(டு) அங்கமுற்றும் மூடித் துயிலினிரண்(டு)
அக்கிக்கும் தோட்கும் அதிபலமாம்—மிக்கான
சீதவெயில் தூசிபனி சீறிவரு காற்றிவையால்
ஓதவரு துன்பமில்லை உன்"

என்பது அது (1550).

ங. மூன்றும் செய்தி, தண்ணீர் பருகுவதுபற்றியது. அண்ணாந்து தண்ணீர் பருகுவதே நாகரிகம் என நம்மவரால் போற்றப்பெற்று வருகிறது. உடல்நலத் துறையும் அம் முறையைத் தக்கதென வலியுறுத்துகிறது. நடைமுறை ஒழுக்கத்துள் ஒன்றாக நம்மவரால் கொள்ளப்பெறுவதாம் அண்ணாந்து நீர் பருகுதலைத் தடுக்கிறது சித்த மருத்துவ நூல்; குனிந்து நீர் பருகுவதையும் குற்றம் கூறுகிறது; கடித்துப் பருகுவதே நலமென்றும் நவில்கின்றது. இவற்றை ஆராய்ந்து தெளிந்த கருத்துக் கூறுதலும் பொதுப் பயன் செய்வதாகுமே!

"தண்ணீரண் ணாந்துண்டால் சாரும் செவிமந்தம்;
கண்ணைக் குனிந்துண்டால் காசமுண்டாம்;—தண்ணீர்
குடிக்கவென்றூற் பாத்திரத்தைக் கோதறவே வாயாற்
கடித்தருந்தத் துன்பமில்லை காண்"

என்கிறது பதார்த்த குண சிந்தாமணி (1399).

அண்ணாந்து நீர் பருகினால் செவிப்புலன் மந்தப்படுதலும்— ஏன், செவிடாதலும் கூட உண்டாதலும், குனிந்து நீர் பருகினால் காச நோய் உண்டாதலும் நேரிடுமென்று கூறுவதை ஆய்ந்து முடிவு கூறுதல் அறிஞர் கடமை என்பதில் ஐயமில்லையே! மருத்துவ உலகம் தெளிந்த விடையிறுப்பதாக! நல்வழி காட்டுவதாக!

———

# கொல்லிமலைக் குமரன்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருட்டிண சாலை, சேலம்-7]

ஓரி கடையெழு வள்ளல்களுள் ஒருவன். ஒரு நாள் அவன் வேட்டை ஆடுங்கால், யானையை நோக்கி அவன் எய்த அம்பு, யானையை மட்டுமன்றிப் புலி. கலைமான், காட்டுப் பன்றி மற்றும் உடும்பு ஆகியவற்றையும் வீழ்த்தியதாம். இவ்வாறு வில்வன்மையில் சிறந்து இருந்தமையால் இவனை "வல்வில் ஓரி" எனப் பெருஞ்சித்திரனார் என்ற புலவர் புறநானூற்றில் புகழ்ந்து உரைக்கின்றார். மேலும் இவன்,

"விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும்"

வள்ளியோன். அஃதாவது வானின்றும் மழை பொழிவது போன்று இவன் யாருக்கும் எல்லாவற்றையும் வரையறையின்றி அளிக்கும் வள்ளன்மையுடையவன் என்பதாம். இவனது வள்ளல் தன்மையின் சிறப்பியல்பு வன்பரணர் மற்றும் கழைதின் யானையார் என்ற புலவர்களால் புறநானூற்றில் மூன்று பாடல்களில் பேசப்படுகின்றது. இவன் ஆண்ட "பிறங்குமிசைக் கொல்லிமலை" சேலம் மாவட்டத்தில் உள்ளது. மேலும், கொல்லிமலையில் இருந்த பாவையைப்பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் பேசப்படுகின்றன.

இராசிபுரத்தினின்றும் சேந்தமங்கலம் வழியாக நாமக்கல் செல்லும் வழியில் பேளுக்குறிச்சி என்ற சிற்றூர் உள்ளது. அதனை அடுத்த கொல்லிமலைச் சாரலில் குன்றுதோறும் ஆடும் குமரனுக்குக் கோயில் ஒன்று உள்ளது. அது 'பழனியப்பர் கோயில்' என வழங்கப்பெறுகிறது. மதிற்சுவருடன் கூடிய சுற்று, கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியவற்றுடன் கோயில் காணப்படுகிறது.

கருவறையில் செந்தமிழ் நூல் விரித்தோனும் முருகன் திருவாசியுடன் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளான். ஒரு முகம், இரு கைகளுடன் அமைக்கப்பட்டுள்ளான். தனக்கே உரிய சக்தி என்ற படைக் கலத்தை வலக் கையில் வைத்துள்ளான். இடக் கை தொங்கிய நிலையில் (கத்யவலம்பித முத்திரையில்) தனது கொடியான சேவலுடன் காணப்படுகிறது. கைகளில் கடகம், கால்

களில் கழல், மார்பில் மாலைகள் அணிந்துள்ளான். அவன் அணிந்துள்ள ஆடை அழகுற அமைந்துள்ளது. அவனது விரிந்து பரந்த மார்பு அவன் வானவர்களின் தானைத் தலைவன் என்பதற்கு ஏற்றாற் போன்று உள்ளது. இங்குத் தலையில் காணப்படும் கொண்டை போன்று வேறு எங்கும் முருகனது திருவுருவிற்கு இல்லை என்னலாம்.

ஆகமங்களில் முருகனின் திருவுருவங்கள் கந்தன், சேனாபதி, சுப்பிரமணியன், கசவாகனன், சரவணபவன், கார்த்திகேயன், குமரன், சண்முகன், தாரகாரி, சேனானி, பிரமசந்தா, கிரவுஞ்ச பேதன், சிகவாகனன் எனப் பலவகையாகக் கூறப்பட்டுள்ளன. முகங்கள் ஒன்று, இரண்டு, நான்கு அல்லது ஆறு இருக்கலாம். கைகள் இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, பத்து அல்லது பன்னிரண்டு இருக்கலாம். இரண்டு கைகளையுடைய திருவுருவங்கள் ஐந்து வகையாகச் சொல்லப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று வலக் கையில் சக்தி என்ற படைக்கலத்தையும், இடக் கையில் சேவலையும் கொண்டதாக இருக்கும். இங்குள்ள திருவுருஇதற்கு ஏற்ப உள்ளது. சூரியனது வெப்பம் உலகிற்குத் தீங்கு விளைவித்தமையால், விசுவகர்மன் என்ற தெய்வத் தச்சன் சூரியனது வலிமையினின்றும் சக்தி என்ற படைக்கலத்தைப் படைத்தான் என்று மார்க்கண்டேய புராணத்தில் கூறப்பட்டுள்ளதாம். மேலும் சேவல் கூவுதல் சூரியன் உதிப்பதற்கு அறிகுறி என்பது யாவரும் அறிந்த ஒன்று. எனவே, சக்தி என்ற படைக்கலமும், சேவலும், முருகனுக்கும் சூரியனுக்கும் உள்ள தொடர்பைக் குறிக்கின்றன எனலாம்.

முருகனுடைய திருவுருவங்களில் தலையில் கரந்த மகுடம் தான் பொதுவாக அமைக்கப்பட்டிருக்கும். ஞான சக்தி சுப்பிரமணியத் திருவுருவிற்குச் சடை மகுடமும், பிரமச்சாரி சுப்பிரமணியத் திருவுருவிற்குக் குடுமியும் அமைக்கலாம் -என ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது. ஆகமங்களில் வீரனுக்கு உள்ளது போன்று தலைமுடியைக் கொண்டையாக முருகனுக்கு அமைக்கலாம் எனச் சொல்லப்பட்டதாகத் தெரியவில்லை. போரில் வீரமரணம் அடைந்தவர்களுக்கு வீரக்கல் நட்டு வழிபாடு நடத்துவது அக்கால மரபு. அவை நடுகல் எனவும் சொல்லப்படும். அத்தகைய கற்களில் இறந்த வீரனின் உருவம் செதுக்கப்பட்டிருக்கும். மங்கலப்பொருட்கள், நாய் ஆகியவையும் காணப்படும். வீரக் கற்களில் காணப்படும் வீரனின் தலைக் கொண்டையைப் போன்று முருகனது கொண்டை அமைக்கப்பெற்றுள்ளது குறிப்பிடத் தக்கது. முருகன் வானவர்களின் தானைத் தலைவன். எனவே

அவன் மாபெரும் வீரன் அன்றோ! அதுபற்றி முருகனது தலையில் கரந்த மகுடத்தைவிடக் கொண்டை இருப்பது பொருத்தமாக இருக்கும் என இச் சிலையினை அமைத்த சிற்பி கருதினன் போலும்.

> "ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
> திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ"

என்ற மாணிக்கவாசகர் திருவாக்கிற்கு ஏற்ப, ஓருருவம் இல்லா இறைவனுக்கு மக்கள் தங்கள் நிலைக்கு ஏற்ப உருவம் அமைத்து வழிபாடு செய்கின்றனர் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக் காட்டாம்.

தலையில் கொண்டையுடன் கூடிய முருகனது திருவுரு ஓர் அரிய படைப்பு எனக் கருதலாம்.

---

## புதுமைத் தமிழகம் உருவாக்குவோம்

தமிழில் உருவாகியுள்ள பொறியியல், மருத்துவவியல், மற்றும் அறிவியல் கலைச் சொற்களைச் சிறப்பாகவும், பிற கலைச் சொற்களைப் பொதுவாகவும் மதிப்பீடு செய்யும் நோக்கில் அறிவியல் கருத்தரங்கு தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் ஏப்ரல் 19, 20 இரண்டு நாள்கள் நடைபெற்றது. இக் கருத்தரங்கில் பொறியியல்—மருத்துவவியல் வல்லுநர்கள் மற்றும் இதழ் ஆசிரியர்கள் கலந்துகொண்டனர். வரவேற்புரையாற்றிய துணைவேந்தர் டாக்டர் வ. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் தமிழ் மக்களின் வறுமை அகலத் தமிழகத்தில் தொழில் வளமும், அறிவு வளமும் பெருக வேண்டும்; இதற்குத் தாய்மொழிவழிக் கல்வி இன்றியமையாதது. ஆங்கில வழிதான் கற்க வேண்டும் என்பதில்லை; கலைச் சொல்லாக்கம் அறிவியல் வளர்ச்சியில் மிகவும் முக்கியமானது; கலைச் சொல்லாக்குவது வேறு; வாய்பாடுகளை அமைத்துக்கொள்வது வேறு; சொல்லாக்கம் வேறு. இவற்றை நாம் தெளிவாகப் புரிந்துகொண்டு இப் பணியில் ஈடுபட வேண்டும் எனக் குறிப்பிட்டார். முனைவர் பொன். கோதண்டராமன், திரு. கே. கண்ணபிரான் ஆகியோர் கட்டுரைகள் படித்தனர். இலங்கைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் சிவத்தம்பி அவர்கள் தமது உரையில், நமது மரபு வழிப்பட்ட—பண்பாட்டோடு தொடர்புடைய, பல்வேறு தொழில்களைப்பற்றிய அறிவையும் மக்களுக்கு விளங்க உரைக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். 'தென்மொழி' ஆசிரியர் பெருஞ்சித்திரனார் அவர்கள் கலைச் சொற்களை ஆக்கும்போது தமிழ்ப்பற்று, தமிழறிவு, துறை அறிவு, நடுவிலைமை, சொல் சுருக்கம், தெளிவு முதலியவற்றை மனத்தில் கொள்ள வேண்டும் எனக் கூறினார்கள். இரண்டாம் நாள் கருத்தரங்கிற்கு மொழிபெயர்ப்புத் துறை இயக்குநர் முனைவர் ஔவை நடராசன் அவர்கள் தலைமை ஏற்க முனைவர் இராச இராசேசுவரி, திரு. ப. கிரன், முனைவர் கா. ரா. கிருட்டிணன், முனைவர் கதிரேசன் ஆகியோர் கருத்துரை வழங்கினர். இறுதியில் துணைவேந்தர் அவர்கள் நிறைவுரையாற்றினார். முனைவர் இராமசுந்தரம் நன்றி கூறக் கருத்தரங்கு முடிவுற்றது.

# தமிழக ஆப்பிரிக்கக் கழங்கு—ஒரு களஆய்வு

[முனைவர் திருமதி அறவாணன்,

இலக்கியத்துறை, தக்கார் பல்கலைக்கழகம், தக்கார்—செனகால்.]

பண்டை மாந்தர், ஓய்வு நேரங்களில் உடல் திறனை ஊக்கும் ஆட்டங்களை ஆடினர். அவை களியாட்டங்களாகப் புறவிளையாட்டாக அமைந்தன. பின் மூளைத் திறனை வளர்க்கும் அக ஆட்டங்களையும் கற்றுக்கொண்டு ஆடினர். வேறு தொழிலும் நோக்கமும் இல்லாத மகளிர் அக ஆட்டங்களுக்கு முதன்மை கொடுத்து ஆடினர். அவற்றுள் முகிழ்த்த ஒன்றே கழங்கு. கழக மகளிர் கழங்கு ஆடியதாகப் பெருப்பாணுற்றுப்படை,[1] அகம், முதலிய[2] கழக இலக்கியங்கள் சான்று பகரும். இக் கழங்கு ஆட்டமே வட்டில், அம்மானை, தட்டாங்கல், கழச்சி என்று வழங்கப்படுகின்றது. கழற்சி என்ற ஒருவகைக் காயினைக் கொண்டு (Mollucca beans) ஆடப்பெறும் கழற்சி ஆட்டம் இன்று கல் வைத்து ஆடப்பெறுவதையும் கழற்சி என்று குறிக்கும் பொதுப் பொருட் பேராயிற்று.

ஆப்பிரிக்க மகளிரிடையேயும் [3]கழங்கு ஆட்டம் பரவலாகக் காணப்படுவது பெருவியப்பிற்குரியது. தம் ஓய்வு நேரங்களில் கழற்சிக் காய்களை (Mollucca beans) மிகுதியாக வைத்து, பெதும்பையர் முதல் வயதுப் பெண்டிர் வரை ஆடுகின்றனர். கழற்சிக்காய் தற்போது அருகிக் காணப்படுவதால் சிறு உருண்டைக் கற்களை மிகுதியாக மாற்றாகப் பயன்படுத்துகின்றனர். பல்வேறு ஆட்ட முறைகளில் ஆடுவதும் வியப்பூட்டுகின்றது. தமிழகத்தை விட இரண்டுக்கு மேல் பத்துவரை பெண்கள் அமர்ந்து விளையாடுகின்றனர். நான்கைந்து கிலோ கற்களை இட்டுப் பெண்டிர் பலர் ஆடுவது இயல்பானது. குறைந்தது பத்துக் கற்களே.

---

1. முத்தவார் மணல் பொற்கழங் காடும் - பெரும்பாண். 334 - 335.

2. கோடுடை கழங்கின - அகம் 135.

3. ஆப்பிரிக்க செனகால் நாட்டு ஓலப், செரேர், துக்லர் பாந்திங் ஆகிய மொழி பேசும் மக்களின் விளையாட்டு அடிப்படை.

**ஒற்றைக் கழங்கு ஆட்டம்:**

தமிழ்நாட்டில் குறைந்தது ஏழு கற்களைக் கொண்டு கழங்கு ஆடுகின்றனர். கையிலுள்ள ஒரு கல்லை மேலே தூக்கிப் போட்டுக், கீழே கிடக்கும் மீதி ஆறு கற்களையும் ஒன்று ஒன்ருக எடுப்பர். இந்த முறை ஆப்பிரிக்க செனகால் மக்களின் ஒற்றைக் கல் ஆட்டத்தோடு ஒத்து வருகிறது. இம் மக்கள் குறைந்தது பத்துக் கற்களைக் கொண்டு ஆடுகின்றனர். ஒரு ஒரு கல்லாக ஒன்பது கற்களையும் எடுத்த பின் தம் கைக்கல்லான பத்தாவது கல்லைத் தங்களது வெற்றிக் காயாக எடுத்துக்கொள்வர். வெற்றி பெற்றவரே மறுபடியும் ஆடுவர். கல் போடும்போது தவறினல் அடுத்தவர் ஆடத் தொடங்கிடுவர். ஆட்டத் தொடக்கம் கற்களைக் கையில் வாரி எடுத்து, வலப்புறங்கையில் போட்டுத் தங்கியவற்றையும் அலுக்கிக் கீழே போட்டுவிட்டு அதில் ஒன்றை மட்டும் உள்ளங்கையில் பிடித்துக்கொண்டு பின் அக்கல்லை உயரே போட்டு ஒவ்வொன்ருகப் பிடித்து ஆடவேண்டும். இவ் வாட்டத் தொடக்கமும் முறையும் தமிழகத்தின் ஒற்றைக் கல் ஆட்டத்தோடு ஒத்து வருகிறது. செனகாலில் கழங்கு ஆட்டத்தை ஓலப் மக்கள்—டம் என்றும் துக்லர் - தேங்கோ என்றும், செரேர்—தேங்கோ என்றும், மாந்திங்—ஓர்வா என்றும் அழைக்கின்றனர். கல்லை ஓலப்—கெயர் என்றும், துக்லர்—காசே (Kāje) என்றும், செரேர்—ஆற்ரூ என்றும், மாந்திங்—பேரோ என்றும் அழைக்கின்றனர். இப் பெயர்களிலுள்ள காச்சே என்பது தமிழ்மொழி 'கழற்சி'யோடும், கெயர் என்பதும், கொல் என்பதும் தமிழ்மொழி 'கல்' ஓடும் ஒத்து நோக்கத் தக்கன.

**இரட்டைக் கழங்கு ஆட்டம்:**

இவ்வாட்டத்திற்கு 2, 3 கிலோ கற்கள் தேவை. கையிலுள்ள கற்களைப் புறங்கையில் போட்டு அதில் ஒரு கல்லை மட்டும் பிடித்து ஆட்டத்தைத் தொடங்க வேண்டும். அவ்வொரு கல்லை மேலே உயரத் தூக்கிப் போட்டு இரண்டு இரண்டு கற்களாகக் கீழே கிடப்பவற்றை எடுக்க வேண்டும். இம்முறை இரண்டிடத்தும் ஒன்றுபடுகிறது. இம்முறையைச் செனகால் மக்களில் துக்லர் இனத்தார் டொசில் (Dojil) என்று அழைக்கிருர்கள்.

**மூன்று கழங்கு ஆட்டம்:**

கீழே கிடக்கும் கற்களில் மூன்று மூன்ருக எடுப்பது. தமிழகத்தில் மூன்று கற்களைச் சேர்த்து ஒரேயடியாக எடுப்பர். இம்முறை

செனகாலில் இருப்பினும் இன்னொரு வியப்பான முறையையும் இங்குக் காணலாம். கல் உயரே சென்ற நேரத்தில் கீழே கிடக்கும் மூன்று கற்களை ஒவ்வொன்றாகப் பொறுக்கிவிட்டுப் பின் உயரே சென்ற கல்லைப் பிடித்திடுவர். இதில் பலருக்கும் தவறுவது உண்டு. தவறாது திறமையாகப் பிடிப்பவர் வெற்றி அடைபவர் ஆவர். இம் முறையைத் துக்லர் இனம் மிகு திறமையாக ஆடுகிறார்கள். இதை இவர்கள் பீபி என்றழைக்கிறார்கள். மிகுதியான கற்களைப் போட்டுவிட்டு மூன்று மூன்றாக எடுத்துக் கொண்டே வருவது வியப்பே.

### குவியல் கழங்கு ஆட்டம் :

குவியலாக எடுத்து வருவதும் இரு நாடுகளுக்கும் பொதுவானது. நான்கு முதல் எத்தனை இருந்தாலும் அப்படியே மொத்தமாக எடுப்பது. இதிலும் தவற வாய்ப்பு நிறைய உண்டு. இம்முறையைத் துக்லர் இனத்தார் மோபில் என்பர்.

### புறங்கைக் கழங்கு ஆட்டம் :

கைக் கற்களைப் புறங்கையில் போட்டுவிட்டுச் சற்று உயரே போட்டுப் பின் அகங்கையில் வளைத்துப் பிடிக்க வேண்டும். இப்படியே எல்லாக் கற்களையும் பிடித்துக்கொண்டே வர வேண்டும். இதிலும் கற்கள் தவறிக் கீழே விழ வாய்ப்பு உண்டு. இம் முறை இரு நாடுகளிலும் பொதுவாக இருக்கிறது. இதைத் துக்லர் இனம் 'சரில்' என்றழைக்கிறது.

### செனகாலுக்கே உரிய கழங்கு ஆட்ட வகைகள் :

1. கழங்கு பொறுக்கல் :

இதற்குப் பத்துக் கற்களை மட்டுமே பயன்படுத்துகின்றனர். பத்துக் கற்களைப் புறங்கையில் போட்டுவிட்டு மீதியை அறுக்கிக் கீழே போட்டுவிட்டு ஒன்றை மட்டும் புறங்கை விரல் இடுக்கில் வைத்துவிட்டுப் பின் கட்டைவிரலுடன் ஆட்காட்டி விரலையும் சேர்த்துக் கீழே கிடக்கும் ஒன்பது கற்களையும் ஒன்று ஒன்றாகப் பொறுக்க வேண்டும். அவ்வாறு பொறுக்கும்போது புறங்கை விரல் கல் கீழே விழாது பார்த்துக்கொள்ள வேண்டும். கீழே விழுந்தால் அடுத்தவர் ஆடத் தொடங்குவர். ஒன்பது கற்களை எடுத்தபின் பத்தாம் கல்லைத் தமது வெற்றிக் காயாக எடுத்துக் கொள்வர்.

**2. குவியலைச் சரித்தலும் ஒன்று ஒன்ருகத் தள்ளித் தள்ளி ஆடலும் :**

நிறையக் கற்களைக் குவியலாக வைத்துவிட்டுப் பின் ஒரு கல்லை மட்டும் மேலே தூக்கிப் போட்டு அதே நேரத்தில் கீழே இருக்கும் குவியலைச் சரிக்கவேண்டும். சரித்தபின் மீண்டும் அதே கல்லை மேலே தூக்கிப் போட்டு, கீழே சரிந்து கிடக்கும் கற்களில் ஒன்று ஒன்ருக நீக்கி நீக்கித் தள்ளித் தள்ளி ஒன்றை எடுக்க வேண்டும்.

**செனகாலில் கழங்கு**

| | இனமக்கள் | கழங்கு ஆட்டத்தின் பெயர் | கழங்கின் கல்-பெயர் |
|---|---|---|---|
| 1. | ஓலப் | டம் | கெயர் |
| 2. | துக்லர் | தேங்கோ | காசே(ஜ) |
| 3. | செரேர் | கொல் | ஆற்ரூ |
| 4. | மாந்திங் | ஓர்வா | பேரோ |

**செனகால் துக்லர் இனத்தின் ஒவ்வோர் ஆட்ட வகைக்கும் தனித்தனிப் பெயர்**

| | முறை | பெயர் |
|---|---|---|
| 1. | ஒன்று ஒன்ருக எடுப்பது | கொச்சில் |
| 2. | இரண்டு இரண்டாக எடுப்பது | டொசில் (Dojil) |
| 3. | மூன்று மூன்ருக எடுப்பது | பீபி |
| 4. | புறங்கையில் ஏந்தி எடுப்பது | சரில் |
| 5. | பல கற்களைச் சேர்த்து எடுப்பது | மோபில் |
| 6. | ஒன்ருகச் சேர்ந்த கற்களைத் தள்ளிச், சிதறிப், பின் ஒன்று ஒன்ருக எடுத்தல் | தேட்டில் |

## தமிழக செனகால் ஒப்புமை

| பால் | எண்ணிக்கை | காய்களின் தன்மை | காய்களின் எண்ணிக்கை | இடம் | காலம் | வெற்றி | தோல்வி | ஆடும் முறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| பெண்கள் சிறுமியர் | குறைந்தது இருவர் | கழற்சி (Moluc cabeans) கல் (Stone) | குறைந்தது 7 (தமிழகம்) 10 (செனகால்) | தரை | நண்பகல் உண்ட பின் | ஒன்றும் ஒன்றுக்கு மேலும் | ஆட்டத்தில் கல் எடுக்கத் தவறினால் | ஒற்றைக் கழங்கு ஆட்டம் இரட்டைக் ,, ,, மூன்றும் மேலும் ,, புறங்கை ஆட்டம் |

## தமிழக செனகால் வேற்றுமை—இருப்பவை இல்லாதவை

### தமிழகம்

1. ஆடும்போது பாடலும் உண்டு
2. ஆடும்போது விரல் பட்டுக் கல் அசைதல்கூடாது (சில ஆட்டங்களுக்கு மட்டும்)
3. குறைந்தது 7 கற்கள்
4. ஒரே ஆட்டத்தில் 1, 2, 3 கற்களாக எடுக்கும் முறை உண்டு
5. இல்லை
6. இல்லை
7. இல்லை
8. பிடித்த கற்களையே மீண்டும் போட்டு 2, 3, 4, 5 ஆக ஆடும் முறை உண்டு.

### செனகால்

1. இல்லை
2. இல்லை
3. குறைந்தது 10 கற்கள்
4. தனித்தனி ஆட்டம் (புறவகையில் ஒருகல் வைத்துக்கொண்டு)
5. இரண்டு முதல் விரல்களால் கீழே கிடக்கும் கல் பொறுக்குதல் உண்டு
6. குவியலைச் சரித்து ஒவ்வொரு கல்லாக நீக்கி நீக்கி ஆடும் முறை
7. ஒவ்வோர் ஆட்டத்துக்கும் தனிப் பெயர்கள் உண்டு
8. இல்லை.

தமிழக நாட்டுப்புறக் கழங்குப் பாடல்:

1. ஓரி ஒருவளா உலகெலாம் சூரியா
சூரியன் தங்கைக்கும் சுந்தர வல்லிக்கும்
மாயக் கல்லியாணம்.

2. ஈரிரெண் டெடுக்கவே இரட்டணம் பார்க்கவே
முத்துக் கோக்கவே.

3. முக்கட்டு தக்கட்டு முருங்கை பதினெட்டு.

4. நாலே வச்சு இரண்டெடு நாராயணன்
பேரெடு பேரைச் சொல்லிப் பிச்சையெடு.

5. ஐவான் அரசே அரசாள் தருவே.

6. அக்கூறு குறுகுறு அள்ளிப்போட்ட வேர்க்குறு.

7. ஏழே எழுதிக்கோ என்பேரைச் சொல்லிக்கோ
தாழ அடியிலே தண்ணீர்ப்பந்தல் போட்டுக்கோ.

8. எட்டும் கோட்டும் இடைக்கொரு தட்டும்.

9. ஒன்பது சம்பா சந்தனக் கும்பா.

10. பத்தே பதிபதி நெத்தே நெரிநெரி.

—குமரி மாவட்ட நாட்டுப்பாடல்
உதவியவர்—நாஞ்சில் நங்கை.

இரண்டு முறை தள்ளித் தள்ளியே பின் எடுக்கவேண்டும். தள்ளிக்கொண்டிருக்கும்போது மேலே போட்ட கல் கீழே விழ வாய்ப்பு நேரும். வாய்ப்பு நேராதவாறு இரண்டுமுறை தள்ளியே எடுக்க வேண்டும். தள்ள இயலவில்லை என்றால் மறுபடியும் கல்லை மேலே தூக்கிப் போடவேண்டும். இஃது இங்குள்ள மற்றோர் ஆட்ட வகையாகும். இதைத் துக்லர் இனம் இரண்டு வேறு முறையாக ஆடிவருகின்றது. கொச்சில் என்றும், தேட்டில் என்றும் இரண்டு வகைக்கும் பெயர் இங்கே உண்டு.

மணல் கழங்கு ஆட்டம்:

மணலில் பத்துக் கற்களையும் வைத்து ஆடுவது. ஒரு கல்லை மேலே தூக்கிப் போட்டுவிட்டுக் கீழே குவித்த கற்களைப் பிரிக்க வேண்டும். ஒன்று ஒன்றாகத்தான் தள்ள வேண்டும். அப்படிக் கலைக்கும்போது இரண்டு தள்ளப்பட்டுவிட்டால் ஆட்டத்தை அடுத்தவருக்கு விட்டுவிட வேண்டும். இதை ஒலப்

மக்கள் அதிகமாக விளையாடுகிறார்கள். இதுவும் தமிழகத்து இல்லாதது.

முடிவுரை:

தமிழகத்து ஏழு கற்களை வைத்துக்கொண்டு பத்து முறை ஆடிவருகின்றனர். பத்து முறைக்கும் பத்துப் பாடல் வரிகள் உள்ளன. ஆனால் ஏழு கற்களே. பத்துக் கற்கள் முன்பு இருந்திருக்கலாமோ என்ற ஐயம் எண்ணிப் பார்க்கத்தக்கது. செனகாலில் தனித்தனி ஆட்டத்தில் ஒன்றாக, இரண்டாக, மூன்றாகக் கற்களை எடுக்கிறார்கள். ஆனால் தமிழகத்தில் ஒரே ஆட்டத்தில் ஒன்றோ, இரண்டோ, மூன்றோ வாய்ப்புக்குத் தக்கபடி எடுக்கிறார்கள். செனகாலில் ஒவ்வோர் ஆட்டத்துக்கும் தனித்தனிப் பெயர்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது. தமிழகத்து இலக்கியச் சான்று, நாட்டுப்பாடல் இவ்வாட்டத்திற்கு உண்டு. இவ்வாறாகக் கழங்கு ஆட்டம் இரு நாடுகளிலும் சிறப்பாக ஒத்து அமைந்துள்ளது.

---

## "கவிதைக் குழந்தை"

[வேலூர். ம. நாராயணன், எம். ஏ,]

"கவிதை யென்பது குழந்தை போன்றது
அதனைப் பயத்தல் அத்துணை எளிதல
கருத்துக் காளையும் கலையெனும் கன்னியும்
பருவம் வந்ததும் பெருமணம் எய்தியே
மரபெனும் மனையுள் மேவுதல் வேண்டும்!

இலக்கிய மென்னும் உலகியல் நுட்பம்
இலக்கண மென்னும் இல்லற ஒழுக்கம்
உணர்ந்து தெளிந்து ஒழுகவும் வேண்டும்!

எழுத்து சொல்லெனும் அழகிய மலரிதழ்
எங்கும் விரவியே எழில்நிலை கூட்டும்
யாப்புக் கட்டிலில் காளையும் கன்னியும்
இணைந்து மகிழ்ந்து இன்பம் துய்த்ததும்

கருவில் தோன்றும் கருத்துச் சினைதனைக்
காலந் தோறும் கண்ணெனக் காத்தபின்
உரிய வேளையில் புறந்தரும் கலையின்
அருமைக் குழந்தையே 'கவிதை' என்பது!

ஏனைய முறையில் தோன்றுவ எல்லாம்
கவிதைகள் அல்ல; காகிதக் குப்பையே!"

---

# தொலேக்காட்சிமூலம் 'இந்தி' பரப்புதல்

இமயம் முதல் குமரி வரை 'இந்தி' வண்ணமாக்கும் முயற்சியில் இந்திய மைய அரசினர் பல்லாண்டுகளாகப் பல வழிகளில் முயன்று வருவதும், அம் முயற்சிக்குத் தமிழ்நாட்டிலும், தமிழ் நாடு போன்ற உணர்வு படைத்த ஒரு சில பகுதிகளிலும் எதிர்ப்பு இருந்து வருவதையும் நாட்டு மக்கள் நன்கறிவர்.

''இந்தி'' திணிப்புக் கூடாது என நாம் கூறி வந்தோம். 'திணிப்பு தானே கூடாது, ஆயின் பரப்பும் முயற்சியினைச் செய்வோம்' என்பது போல, ஒலியும் ஒளியும் இணைந்து செயல்படும் தொலேக்காட்சி மூலம், இந்தியில் செய்தி ஒளி பரப்பு என்ற முறையில், வரும் சூன் திங்களிலிருந்து 'இந்தி'த் திணிப்பு பக்குவமாகச் செயல்படும் எனத் தெரிகிறது.

இவ்வாண்டு சூன் திங்கள் முதல் நாடோறும் இரவு 9 மணி முதல் 10-30 மணி வரை தொலேக்காட்சியில் இந்தியில் நிகழ்ச்சிகள் நடைபெறுமாம். இப்படியொரு செய்தி அண்மையில் வெளிவந்துள்ளது.

தமிழ்நாட்டில் தமிழ்மக்களின் நல்வாழ்வுக்கும், அறிவு வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் எத்துணேயோ நிகழ்ச்சிகளேப் பயனுள்ள வகையில் தொலேக்காட்சிமூலம் நடத்திக் காட்டலாம். ஆனல், செய்தி பரப்புத் துறையினர் இதற்கு மாருகப் பயனற்ற சில நிகழ்ச்சிகளேயும், கிழமை தவருமல் இந்தித் திரைப்பட மொன்றினேயும் காட்டி வருகின்றனர். ஆரியக் கூத்தாடினுலும் காரியத்தில் கண் வைக்கும் இவர்கள் எப்படியேனும் இந்தியைத் திணிக்கும் முயற்சியினேயும் ஊடே ஊடே மேற்கொள்கின்றனர். அது போதாதென்று இனி இந்தி பரப்புதற்கெனவே நாடோறும் ஒன்றரை மணி நேரம் ஒதுக்குவார்களாயின், நாளடைவில் அதன் விளேவு என்னுகும் என்பதை நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

முன்னர் ஆங்கியேர் ஆட்சியில் ஆங்கிலம் இப்படித்தான் பல வழிகளிலும் மெள்ள மெள்ளப் புகுந்து மேலாண்மை செலுத்தத் துவங்கி, இன்று, இந் நாட்டவர், குறிப்பாகத் தமிழ் நாட்டாரிடையே ஆங்கில 'மோக'மும், ஆங்கிலம் கலவாமல் நாலு சொற்களேப் பேச முடியாத—விரும்பாத—நிலேயும், அப்படிப் பேசுவதுதான் நாகரிகம் என்று எண்ணக்கூடிய நிலேயும் இன்று வளர்ந்துள்ளமையினேக் காண்கின்ருேமன்ருே!

வானொலியும், தொலைக்காட்சியும் முன்னரே ஒரு குறிப்பிட்ட சாராருக்குப் பயன்படும் வகையில் இயங்கி வருவதை நாம் அறிவோம். இந்நிலையில் தொலைக்காட்சியில் இந்திக்கு அதிக இடம் அளிக்கப்படுமாயின், அஃது அவ்வளவோடு நிற்குமா? இந்தி அறியாத மக்கள் அதனை நன்கு அறிந்துகொள்ளட்டும் என்பதற்காக இந்தி கற்பிக்கும் நிலையே வரும். அதுவும் தொடருமானால், "பார்த்தீர்களா இந்தி தெரிந்தவர்களின் தொகை பெருகியுள்ளது" என்று கூறிப் பின்னர்ப் பெரும்பாலும் இந்திக்கே இடமளிக்காமலிருப்பார்களா? நாளடைவில் இதன் விளைவு என்னாகும்? பள்ளிச் சிறுவர் பைந்தமிழ் மறப்பர்; 'திரு' வெனும் திருமொழி மறையும். 'நமஸ்தே' 'அச்சா' நாட்டியமாடும்.

இவற்றையெல்லாம் ஏன் சுட்டிக்காட்டுகின்றோமென்றால். "ஒரு நாட்டில் பெரும்பான்மையினர் பேசும் மொழியைத் தெரிந்து கொள்வது நல்லதுதானே" என்று இந்திக்குப் பரிந்துகொண்டு பேசுவோர் பலர் உளர். பிற மொழிகளை விரும்பி அவரவர் பயில்வது குற்றமில்லை. ஆனால், வலிந்து பரப்பப்படும்போது தான், அம்மொழி நுழைவின் உட்கிடக்கை புரிகின்றது.

ஒரு மொழியினர் ஒரு நாட்டின் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டுமானால் முதலில் அவர்தம் மொழியை அந்நாட்டின ரிடையே பரப்பிடல் வேண்டும் என்று அறிஞர் ஒருவர் கூறினர். அக் கூற்றின்படி, இதுகாறும் தொலைவில் நின்ற 'இந்தி' தொலைக்காட்சிமூலம் நம்மை எட்டிப்பிடிக்குமானால்—கிட்டே வருமானால்—நெருங்கிப் பழகத் துவங்குமானால் இந்தியின் மேலாண்மை மட்டுமன்று, இந்திக்காரர்களின் மேலாண்மையும் ஓங்கு மன்றோ?

முன்னரே, தமிழர்களாகிய நாம் வடமொழி மேலாண்மையி லிருந்து விடுபட மறைமலையடிகள் காலந்தொட்டு முயன்றும் இன்றைக்கும் தனித்தமிழ் பேசுவோர் எழுதுவோர் தொகை எதிர்பார்த்த அளவு பெருகவில்லை. தனித்தமிழ் முயற்சிக்கு ஊறு விளைவிக்கும் வண்ணம் வானொலியில் நாடகங்களும், உரை யாடல்களும் நடந்த வண்ணம்தான் இருக்கின்றன. செய்தித் தாள்களைப்பற்றியோ கூற வேண்டியதில்லை. தாய்மொழிப்பற்றுக் கொள்வதும் அதன் தூய்மையை விரும்புவதும் நாட்டு ஒருமைப் பாட்டுக்குப் பொருந்தாது என்று பேசும் பரந்த மனப் பான்மை படைத்தோரும், அனைத்துலக அரசியல் வாதிகளும் நம்மிடையே இருந்துகொண்டுதாம் இருக்கின்றனர். தமிழ்—தமிழ்நாடு—தமிழர் நலம் என்றெல்லாம் பேசுவது குறுகிய மனப்பான்மை என்கின்றனர்.

இதேநேரத்தில்தான் தமிழக எல்லையைக் கடந்து ஆந்திரம், கன்னடம், கேரளம் போன்ற நாடுகளில் மொழி வெறியும் இன வெறியும் தலைதூக்கத் துவங்கியுள்ளது. நாமாவது ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற மனப்பான்மையுடன் இயங்கி வருகின்றோம்.

இந் நிலையில்தான் தொலைக்காட்சியும் 'தொல்லைக் காட்சி' யாக மாறும்போல் இருக்கிறது. எங்கும் எதிலும் 'இந்தி' என்ற நிலை ஏற்படுவதுதான் ஒருமைப்பாட்டுக்கு வழி எனத் தவருகக் கருதுகின்றனர். ஒருமைப்பாடு (uniformity) வேறு; ஒற்றுமை (unity) வேறு என்பதைப் பிரித்துக்காண முடியாமையால் இடர்ப்படுகின்றனர். ஒன்றுபோல் இருப்பது ஒற்றுமை யாகாது. வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே நாட்டு நலனுக் குகந்தது.

எனவே, ஒன்றுமட்டும் அறுதியிட்டுக் கூறுவோம். தமிழகம் பிறமொழி மேலாண்மைக்கு (ஆதிக்கத்திற்கு) இடந் தராமல் இதுகாறும் எதிர்த்தே வந்திருக்கிறது. இனியும் எதிர்க் கும். எனவே, இந்திமொழி பரப்புநர்கள் சிந்தித்துச் செயல் படுவார்களாக.

---

## திருவிளையாடல் புராணத் தொடர் சொற்பொழிவுகள்

*34, சாவடித் தெரு, பல்லாவரம் (இரயில் நிலையம் அருகில்). மறைமலையடிகள் கலைமன்றத்தின்கண் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில்* **சைவப் பிரசங்கமணி திரு. ஏ. டி. ஏ. ஈஸ்வர், எம்.எப்.எஸ்.சி., ஏ. எப். ஐ. சி. டி. (இலண்டன்) ஏ.ஆர்.எஸ்.எச். (இலண்டன்)** *(முன்னுள் துறைமுக அதிகாரி) அவர்கள் 31—1—82 முதல் ஞாயிறுதோறும் மாலை 4 மணியளவில்* **திருவிளையாடல் புராணத் தொடர் சொற்பொழிவு** *ஆற்றிவருகிருர்கள். அன்பர்கள் திரண்டு வந்து சிறப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.*

*அன்பன்*

**வ. சுப்பையா,**

*செயலர்.*

# திருக்குறளைப் படிக்கக்கூடாது என்று கூறுவதா?

## காஞ்சி மடாதிபதிக்குக்
## கி. ஆ. பெ. விசுவநாதம் எதிர்ப்பு !

தமிழ் அறிஞர் கி. ஆ. பெ. விசுவநாதம் ஓர் அறிக்கையில் கூறி இருப்பதாவது: காஞ்சிபுரத்துச் சின்னவர் (ஜெயேந்திர சரசுவதி சாமிகள்) அமைச்சர் வீரப்பன் முன்னிலையில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் பேசும்போது திருக்குறளைப் படிக்கக்கூடாது என்று பேசியதாக ஒரு பத்திரிகையில் செய்தி வெளிவந்துள்ளது. இப்படி அவர் யாருக்குச் சொல்லுகிறார்? அவருடைய சீடர்களுக்கா அல்லது தமிழக மக்களுக்கா? என்பது தெரியவேண்டும்.

திருக்குறள்மீது இவருக்குள்ள ஆத்திரம் என்ன? அதில் என்ன குறையை இவர் கண்டார்? மற்றவர்கள் ஏன் படிக்கக்கூடாது என்கிறார்?

**ஆபாச நூல் :**

திருக்குறளில் உள்ள இன்பத்துப்பாலைப் படிக்கக்கூடாது என்று சொல்லுகிற இவர் வடமொழியில் உள்ள வாத்ஸ்யாயனர் எழுதியுள்ள காமசூத்திரத்தை என்றைக்காவது படிக்கவேண்டாம் என்று கூறியிருக்கிறாரா?

ஆபாசமாக எழுதப்பட்டுள்ள அந்த நூலைப்பற்றி இதுவரை எதுவும் கூறாத இவர் தமிழ்ப்பண்பு, தமிழருடைய பண்பு, தமிழகத்தப் பண்பு ஆகிய உயர்ந்த பண்புகளைக் கொண்ட இன்பத்துப் பாலைப் படிக்கவேண்டா என்று கூறுவது ஏன்?

இவரை யார் எதைப் படிக்கலாம், எதைப் படிக்கக்கூடாது என்று கேட்டார்கள்?

இதற்கு முன்பு ஒருமுறை காஞ்சிபுரத்துப் பெரியவர், ஆண்டாள் திருப்பாவையில் 'தீக்குறளை சென்று ஓதோம்' என்று சொல்லி இருப்பதாகக் கூறினார். தீமை தரும் திருக்குறளைப் படிப்பதில்லையென ஆண்டாளே கூறியதாகச் சொன்னார். அதற்கு விளக்கம் தந்து திருத்திய பிறகு தவற்றைத் திருத்திக்கொண்டார்.

சாதி—மதம்—தீண்டாமை அனைத்தும் ஒழிய வேண்டும் என்று கூறும் திருக்குறளைப் படிக்கவேண்டாம் என்பது குறள்மீது கொண்டுள்ள வெறுப்பு உள்ளத்தையே காட்டுகிறது.

திருக்குறள் தோன்றி 20 தலைமுறைகளாகின்றன. 2 ஆயிரம் ஆண்டுகள் நிலைத்து நிற்கும் ஓர் இலக்கிய நூல். உலகத்தின் ஐந்து கண்டங்களிலும் உள்ள எல்லா அறிஞர் பெருமக்களும் உலகப் பொதுமறை—என ஏற்றுக்கொண்டுள்ள—ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள—தமிழ்மொழியில் சிறந்த இலக்கியத்தைப்பற்றி இந்தக் கருத்தைச் சின்னவர் கூறியிருப்பது எனக்கு வியப்பைத் தருகிறது.

நாட்டு வணக்கப்பாட்டு—நாட்டுக் கொடி—நாட்டுப் பறவை என்பதுபோல் இந்திய நாட்டின் தேசிய நூலாகத் திருக்குறள் அமைய வேண்டும் என அறிஞர் பெருமக்கள் பலர் எல்லாம் போராடிவரும் இக்காலத்தில் அதன்மீது பொறாமை கொண்டு இவ்வாறு கூறுவது கண்டிக்கத் தக்கதாகும்.

நன்றி: மாலைமுரசு 6—4—82, திருச்சி.

———

# பாவேந்தர் விருது பெற்ற
# கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்

ஒவ்வோர் ஆண்டும் பாவேந்தர் பாரதிதாசன் பிறந்த நாள் விழாவில், சிறந்த கவிஞர் ஒருவருக்குப், பாரதிதாசன் விருதும் பத்தாயிரம் ரூபாய் காசோலையும் தமிழக அரசினால் வழங்கப்பட்டு வருகிறது.

இந்த ஆண்டு, பாரதிதாசன் விருதுக்குரிய சிறந்த கவிஞராக, கலைமாமணி புத்தனேரி ரா. சுப்பிரமணியம் தமிழக அரசினால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

இந்தச் சிறப்பு விருது, திருச்சியில் ஏப்ரல் 29-ல், மிகச் சிறப்பாக நடைபெற்ற பாரதிதாசன் பெருவிழாவில் மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் திரு. எம். ஜி. ஆர். அவர்களால் கவிஞர் புத்தனேரியாருக்கு வழங்கப்பட்டது.



நாற்பத்திரண்டு ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் உணர்ச்சி மிகுந்த எழுச்சிக் கவிஞராக விளங்குபவர் புத்தனேரி சுப்பிரமணியம்.

பள்ளிப் பருவத்திலேயே, மறைமலையடிகளின் மகளார் திருமதி நீலாம்பிகை அம்மையார் அவர்களால் தமிழ் உணர்ச்சி ஊட்டப்பெற்றுத் திரு. வ. திருவரங்கனாருக்கு உதவியாகப் பாளையங்கோட்டையில் 1938ல் இந்தி எதிர்ப்பு இயக்கம், பலிவிலக்குப் பிரசாரம் முதலான பாசறைகளில் ஈடுபட்டவர் கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்.

1940 முதல் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களைப் பின்பற்றி ஏராளமான தமிழ் உணர்ச்சிக் கவிதைகள், இசைப்பாடல்கள், நாட்டிய நாடகக் காவியங்கள், மற்றும் கதை, கட்டுரை, ஆய்வு நூல்கள் எழுதிப் புகழ் பெற்றவர்.

1941இல் சென்னைக்கு வந்தபின், சைவசித்தாந்தக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் தந்த ஊக்கத்தால், தமிழ்ப் பாது காப்புக் கழகம், இந்தி எதிர்ப்பு இயக்கம், 'திரு' ஆதரவு இயக்கம் முதலானவற்றில் ஈடுபட்டு உழைத்தவர் கவிஞர் சுப்பிரமணியம்.

'செந்தமிழ்ச் செல்வி' தமிழ் உலகம், திருமகள், தமிழ் நிலம், விடுதலை, திராவிடன், கலைமகள், சக்தி, பிரசண்ட விகடன், தமிழ்முரசு, குயில் முதலான ஏடுகளில் இளம்பருவத்திலேயே உணர்ச்சி ததும்பும் எழுத்தோவியங்கள் தீட்டியவர்.

1946இல் பேரறிஞர் அண்ணா ஏற்பாட்டில் புரட்சிக் கவிஞருக்குப் பொற்கிழி வழங்கும் விழாவில் அதன் செயலாளர் டி. என். இராமன் அவர்களுக்கு உதவியாக இருந்தவர்.

1947இல் புகழ்மிக்க "பொன்னி" இதழில் "பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்" என்ற வரிசையில் சிறப்பான அறிமுகம் பெற்றவர்;

1948இல் புத்தனேரி சுப்பிரமணியத்தின் "நேர்மையின் வெற்றி" என்ற எழுச்சிக் கவிதையை வரிக்கு வரி பாராட்டிப் பேரறிஞர் அண்ணா அவர்கள் "திராவிட நாடு" இதழில் "காந்தி ராமசாமியும் பெரியார் ராமசாமியும்" என்ற அரிய தலையங்கம் தீட்டியது குறிப்பிடத்தக்கது.

என்றும் இளமை, பெரியார் அண்ணா பெருமை, அம்புலிப்பாட்டுப் பாடாதே!, முத்தமிழ் காத்த முத்தழகி, பாரதி ஒரு நெருப்பு, பொங்கல் விருந்து முதலான பல கவிதை நூல்களையும்,

பாட்டும் கூத்தும், பாவேந்தர் நெஞ்சில் குழந்தைகள், கலைகண்ட மலேயா முதலான ஆய்வு நூல்களையும் படைத்துள்ளவர்.

சிவகாமியின் சபதம், காவிரி தந்த கலைச் செல்வி, சித்திரப்பாவை, கடைஎழுவள்ளல்கள், பாஞ்சாலி சபதம், மனோன்மணீயம், பூமகள் திருமணம், ஞானப்பழம், தன்வினை தன்னைச் சுடும் முதலான இருபதுக்கு மேற்பட்ட நாட்டிய நாடகங்களைப் படைத்துச் சந்திரகாந்தா, ஜெயலலிதா, லதா, மஞ்சுளா, ராஜசுலோசனா முதலான நடன நட்சத்திரங்களால் மேடையேற்றச் செய்த பெருமையும் உடையவர் புத்தனேரி சுப்பிரமணியம்.

கலைவாணர் என். எஸ் கே., டி. கே. எஸ். சகோதரர்கள், நவாப் இராசமாணிக்கம் முதலான நாடகக் குழுவினருக்குப் பாடல்கள் எழுதியதோடு, டி. கே. எஸ். சகோதரர்களின் இராஜ ராஜ சோழன், தமிழ்ச் செல்வம், வாழ்வில் இன்பம், சித்தர் மகள், சிதம்பரனார், சிவகாமியின் சபதம், அமைச்சர் மதுரகவி, உயிர்ப்பலி முதலான நாடகங்களை அரங்கேற்றுவதிலும், 'அவ்வை' சண்முகம் அவர்களுக்கு உறுதுணையாக இணைந்து பணியாற்றியவர். சிவகாமியின் சபதம் நாடக ஆசிரியரும் இவரே.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் 'குயில்' இதழ் சில காலம் டி. என். இராமன் அவர்களின் பொறுப்பில் வெளியானபோது, அதன் துணையாசிரியராகப் பணியாற்றியவர் கவிஞர் சுப்பிரமணியம். இவர் பங்கு கொண்டு வரும் கவியரங்கங்கள் கணக்கில் அடங்கா. இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் முதலான வெளிநாடுகளிலும் கவிதை முழக்கம் செய்தவர்.

1972ல் பறம்புமலைப் பாரி விழாவில் 'கவிஞர்கோ' பட்டமும் 1976ல் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தில் 'கலைமாமணி' பட்டமும் மற்றும், 'புதுமைப்பாவலர்' 'செஞ்சொற் கவிஞர்' 'முத்தமிழ் வித்தகர்' முதலான பட்டங்களும் பெற்றவர் கவிஞர் புத்தனேரியார். அண்மையில் உலகப் பல்கலைக் கழகம் இவருக்கு 'இலக்கிய டாக்டர்' (டி லிட்.) என்ற பட்டத்தை வழங்கியுள்ளது.

இயல், இசை, நாடகம், நாட்டிய நாடகம், திரைப்படம் முதலான பல்வேறு துறைகளில் பாடலாசிரியராகவும் விளங்குபவர்.

இத்தனை சிறப்புக்களும் வாய்ந்த பெருங் கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியத்துக்குப் பாரதிதாசன் விருது வழங்கியது மிகவும் பொருத்தம் என்பதில் ஐயமில்லை. தகுதி வாய்ந்த கவிஞருக்குத் தகுதியான விருது வழங்கிய தமிழக அரசையும், குறிப்பாக மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்களையும் மனமாரப் பாராட்டி நன்றி செலுத்துகின்றோம்.

—ஆசிரியர்.

# செய்திகளும் குறிப்புகளும்

## பாவாணர் நினைவு விழா

மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களின் நினைவு விழா 18-4-82 அன்று மயிலை சீனிவாச சாத்திரியார் அரங்கில் நடைபெற்றது. 'கலைச் சொல்' காலாண்டிதழ் வெளியீடு, நூல் வெளியீடு, பாவாணர் நினைவுப் பரிசளிப்பு ஆகியனவும் நடைபெற்றன. அன்று முற்பகல் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் முனைவர் வி. ஐ. சுப்பிரமணியம் 'கலைச் சொல்' முதலிதழை வெளியிட்டார். முனைவர் கா. மீனாட்சி சுந்தரம், கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன், புலவர் மி. மு. சின்னாண்டார் ஆகியோர் பாவாணரின் அறிவு ஆற்றல்கள்பற்றி உரையாற்றினர். பிற்பகல் நிகழ்ச்சிக்குத் தமிழக வேளாண்மைத் துறை அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள் தலைமை தாங்கி நூலினை வெளியிட்டார். அதனைத் திரு. டி. கே. சீனிவாசன் பெற்றுக்கொண்டார். திரு. பொன்னுசாமி, முனைவர் மெ. சுந்தரம், பேராசிரியர் வை. சொக்கப்பா, மி. மு. சின்னாண்டார், தமிழ் வாணன், அறவாழி தமிழரசி ஆகியோர் கேண்மை உணர்த்துரை வழங்கினர்.

புலவர் த. ச. தமிழன், பேராசிரியர் பூங்காவனம், முனைவர் இளவரசு ஆகியோர் சொற்பொழிவாற்றினர். பின்னர் மாண்புமிகு பாவலர் மா. முத்துசாமி அவர்கள் தலைமையில் பரிசளிப்பு விழா நடைபெற்றது. முனைவர்கள் ஔவை நடராசன், மெ. சுந்தரம், பேராசிரியர் இரா. மதிவாணன் ஆகியோர் பாவாணரின் மாண்புகள்பற்றிச் சொற்பொழிவாற்றினர். திரு சனார்த்தனம் பரிசுகளை வழங்கினார்.

## பாரதிதாசன் பல்கலைக் கழகத் தொடக்க விழா

திருச்சிராப்பள்ளி தியாகராச பாகவதர் கலையரங்கம், மற்றும் எல்லைக் காவற்படைத் திடல் திறந்த வெளியரங்கு ஆகிய இடங்களில் ஏப்பிரல் 29, 30 ஆம் நாள்களில் பாரதிதாசன் பல்கலைக் கழகத் தொடக்க விழா, பாரதியார் நூற்றாண்டு விழா, பாரதிதாசன் பிறந்த நாள் விழா ஆகியன, மிகச் சிறப்பாக நடைபெற்றன. சட்டமன்றப் பேரவைத் தலைவர் க. இராசாராம் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார் முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் பாரதிதாசன் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்தார். மகாராட்டிர நிதி அமைச்சர் மாண்புமிகு வி. சுப்பிரமணியன் பாரதியார் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்தார். பாரதியார் நினைவுத் திட்டங்களை மாண்புமிகு முதல்வர் எம். ஜி. ஆர். தொடங்கி வைத்தார்.

30—4—82 அன்று பாரதிதாசன் பல்கலைக் கழகத் தொடக்க விழா, மேதகு ஆளுநர் சாதிக் அலி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்கள் பல்கலைக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். இந்திய அரசுப் பாதுகாப்பு அமைச்சர் மாண்புமிகு ஆர். வெங்கட்ராமன், திட்ட அமைச்சர் எஸ். பி. சவான், வேளாண்மைத் துறை அமைச்சர் ஆர். வி. சாமிநாதன் ஆகியோர் உரையாற்றினர். மாண்புமிகு நிதி அமைச்சர் முனைவர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா மண்டபத்திற்கு அடிக்கல் நாட்டினார்.

## சித்திரைப் பெருவிழா

செங்கை மாவட்டம் புக்கத்துறை அருள்ஞானப் பெருவெளியின் கிளை நிலயச் சார்பில், சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் மேத் திங்கள் 5ஆம் நாள் தொடங்கி 8ஆம் நாள் முடியச் சித்திரைப் பெருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அருள்ஞானப் பெருவெளியின் செயற்குழுத் தலைவர் திரு. க. முத்துலிங்க ரெட்டியார் கொடி ஏற்றுவித்தார். அன்பர்களால் திருக்கோயில்வழிபாடும் பாராயணமும் நடைபெற்றன. முன்னாள் புதுவை முதல்வர் வெங்கடசுப்பா ரெட்டியார் வரவேற்புரை நிகழ்த்தினர். நான்கு நாட்களிலும் அறிஞர் பலர் அரிய சமய இலக்கியச் சொற்பொழிவாற்றினர். 7—5—82இல் பிரசாரச் செயலாளர் பிரசங்கமணி திரு. அ. தி. அ. ஈஸ்வர் அவர்கள் "திருவிளையாடல் புராணத்தில் வழிபாட்டின் நெறி" என்னும் பொருள்பற்றி அரிய கருத்துரை ஆற்றினர். அருள்ஞானப் பெருவெளி அமைப்பாளர் திரு. சொ. ர. தேமொழியார் "தேனிப்பும் தெளிவு செய்தலும்" என்னும் பொருள்பற்றி உரையாற்றினர். திரு. மு. நரசிம்மன் அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## பேராசிரியர் மீ. பொன். இராமநாதன் செட்டியார் மறைவு

சென்னைத் தியாகராயர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், கழக நூலாசிரியருமான பேராசிரியர் மீ. பொன். இராமநாதன் செட்டியார் அவர்கள் தமது 66ஆவது அகவையில் சென்னையில் 1 4 82 அன்று இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். திரு. செட்டியாரவர்கள் கழக வெளியீடான 'அம்பிகாபதி கோவை'க்குக் குறிப்புரை எழுதியுள்ளார்கள். சிறுகதை சிலவும் எழுதியுள்ளார்கள். எளிமையும் அடக்கமும் இவரிடம் காணப்பட்ட சிறப்பியல்புகளாகும். மறைந்த பேராசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## திரு. முருகு சுப்பிரமணியனார் மறைவு

முன்னாள் 'பொன்னி' இதழாசிரியரும், சிறந்த எழுத்தாளரும், இலக்கிய இதழ்களை எழிலுற நடத்தும் பட்டறிவாளருமான முருகு சுப்பிரமணியம் அவர்கள் 10—4—82இல் தமது 68ஆவது அகவையில் மலேசியாவில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம். மறைந்த ஆசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-ருசு, ௩௬௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

# கழகப் புதிய வெளியீடுகள்

**கழக ஆட்சியர் வ சு. வரலாறு**

ஆசிரியர்; கழக இலக்கியச் செம்மல்

புலவர் இரா. இளங்குமரன்.

அறுபது ஆண்டுகள் அருந்தமிழ்ப் பணியாற்றி, ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக வெளியிட்டவரும், புலவர்களைப் புரந்து போற்றிப் புகழ்பெறச் செய்தவரும், முத்தமிழ் காக்கும் பணியில் முந்திநின்று, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போன்றோரால் பாராட்டப்பெற்றவரும், தாமரைச் செல்வர், செந்தமிழ்ச் செல்வர், தமிழ்ப் பேரவைச் செம்மல் என்னும் பட்டங்களைப் பெற்றுப் பார்புகழ வாழ்பவரும், அறநிலையங்கள் பலநிறுவி அறப்பணியாற்றிவரும் அறச்செல்வரும் ஆகிய கழக ஆட்சியர் வ சுப்பையா பிள்ளை அவர்களின் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கையினை வளம்பட உரைக்கும் வரலாற்று நூல். 350 பக்கங்கள் - அழகிய பதிப்பு. விலை ரூ. 18 00

**எலும்புப் பாதுகாப்பு**–டாக்டர் எம். சி. இராசமாணிக்கம், M B.B.S., M. S. (General)., M. S. (ortho), M. A. M. S. (ortho), F. I. C. S., F. R S. H (London)

விலை ரூ. 12 00

**இஸ்லாமும் தமிழும்**–அப்துல் கறீம், எம்.ஏ., தமிழ்த்துறைத் தலைவர், காதிர் முகைதீன் கல்லூரி அதிராம்பட்டினம். விலை ரூ. 16 00

**கழக அமைச்சர் திருவரங்கனார் வரலாறு**

ஆசிரியர் ; கழக இலக்கியச் செம்மல்

புலவர் இரா. இளங்குமரன்

சை சி. நூற்பதிப்புக் கழகம் தோன்றக் காரணராயிருந்தவரும், மறைமலையடிகளாரின் மருகரும், தமிழ்ப் பாதுகாப்புப் பணியினை முன்னின்று நடத்திவரும் கழக ஆட்சியரின் முன்னவரும் ஆன கழக அமைச்சர் திருவரங்கனாரின் வரலாறு இதன் கண் மிகச் சிறந்த முறையில் எழுதப்பட்டுள்ளது. நூலகங்கள் தோறும் இருக்கவேண்டிய அரிய வாழ்க்கை வரலாற்று நூல். (அச்சில்)

**கெடிலவளம்**–ஆசிரியர் : பேராசிரியர் சுந்தரசண்முகனார்

முன்னர்க் கெடிலக்கரை நாகரிகம் என்னும் அரிய பெரிய நூலை எழுதிய இந்நூலாசிரியர், அதன் வழிநூலாக இதனை உருவாக்கியுள்ளார். இதில் கெடில ஆற்றின் தோற்றம், அதன் வளம், கெடிலக்கரை ஊர்கள், பெருமக்கள், நாகரிகம் இன்ன பிற சுருங்கச்சொல்லி விளங்கவைக்கப்படுகின்றன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால் தென்னார்க்காடு மாவட்டத்தின் வரலாற்றினை அறிய இந்நூல் பெரிதும் பயன்படும். நூலகங்கள் தோறும் இருக்கவேண்டிய வரலாற்று நூல். (அச்சில்)

அப்பர் அச்சகம், சென்னை-1.